Rs 2-00

ஓம்.

ஸத்தியத்தினும் மேலான மதமில்லை.

# மோக்ஷமார்க்கம்.

# Path to Union With God

(in Tamil)

இஃது

## ஓர் உபந்நியாசம்.

"நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாமீர்த், தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழூலப்பிலதனை யுணர்ந் துணர்ந்து, சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றா, லன்றேயப்போதேவீ டதுவேவீடு வீடாமே."

(திருவாய் மொழி.)

நூலாசிரியர்

T. A. கோபால ஸ்வாமி நாயுடு F. T. S.

மிராசுதார்,

வட்டாரம்

சீகாழி தாலூகா,

தஞ்சாவூர் ஜில்லா.

விலை] 1925. [அணா 10.

ஓம்.

ஸத்தியத்தினும் மேலான மதமில்லை.

# மோக்ஷமார்க்கம்.

# Path to Union With God

(in Tamil)

இஃது

## ஓர் உபந்நியாசம்.

"நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாமீர்த்,
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பிலதனை யுணர்ந்
துணர்ந்து, சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து
பசையற்றா, லன்றேயப்போதேவீ டதுவேவீடு வீடாமே."

(திருவாய் மொழி.)

நூலாசிரியர்

T. A. கோபால ஸ்வாமி நாயுடு F. T. S.

மிராசுதார்,

வட்டாரம்

சீகாழி தாலூகா,

தஞ்சாவூர் ஜில்லா.



விலை] 1925. [அணா 10.

# REVIEW

"Path to union with God (in Tamil)" is a lecture by Mr. T. A. Gopalaswami Naidu, enlarged and published in the form of a booklet. The matter is very well thought out and arranged in logical sequence. The booklet begins with a consideration of the fundamental principles in the microcosm (man) and in the macrocosm (universe) and shows that there is a one-to-one correspondence between them.

Then the view points of the three great schools of Vedanta are reconciled and shown to be only different phases of the same Truth. It is then shown that, the idea that Moksha is a kind of lazy seclusion free from responsibilities, is entirely erroneous.

The next section deals with the conditions preliminary to entering the path of Moksha and shows that one need not be a recluse for becomming a Mukta, nor need he be necessarily in old age when all the earth's attractions are expected to have lost their influence over him. The Paths of outgoing and returning are also discussed. The author then goes on to consider the preliminary stages on the Path and the necessary qualifications which one should achieve before entering the Path proper. A very lucid account of the four qualifications (சாதன சதுஷ்டயம்) follows on the lines of "At the feet of the Master." An account of the four famous Initiations and the fetters which

one has to remove as he passes from one to the other of these Initiations is a natural sequence.

Then follows a short description of the work of the **Great Ones**, the real **Guides** of our humanity, the relation between the T. S. and the two **Great Ones**, its true **Founders**; the appearances of the **Great Teachers** at different times in the history of the world are mentioned and cogent arguments are given for the now-growing expectation of the near coming of a Great Teacher to preach the ever old-new message, suited to our present conditions and found a new civilisation.

The last section gives practical hints as to how best we can make ourselves useful to the world and hence to the **Great Masters**. The importance of study, meditation, daily review of one's own thoughts, words and deeds, is brought out very clearly. Suggestions follow as to how we can serve the world along the lines of religion, education, social reform, political reform and co-operative systems.

A few words about the Great Inner Government of the world of which all outer happenings are only faint and distorted reflections—a Government by the Great Rishis, Masters, Saints and Sages, who are the real Rulers—form a fitting conclusion to this neatly got-up booklet.

The language is very clear, cogent, precise and appealing. In a very short space the author has covered a very wide ground in a comprehensive manner. The extremely apt quotations from the great

works of Thayumanavar, Ramalingaswami, from Thevaram, Thirumanthram, Thiruvoimozhi and so on form a most interesting and useful feature of the booklet. The author has done a signal service to the Tamil-speaking people of this country by this publication."

R. SRINIVASAN, M. A; M. R. A. S.
College Professor, Trivendrum.

# பிழைத் திருத்தங்கள்

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 18 | கேட்ப்போரின் | கேட்போரின் |
| 3 | 5 | ருவரலை | பருவரலை |
| 6 | 12 | विधिसावत्किम | विद्धिसात्विकम् |
| 13 | 20 | நுந்தீபற் | றுந்தீபற |
| 15 | 1 | , | . |
| ,, | 6 | . | , |
| 19 | 1 | व्यक्त | ऽव्यक्त |
| 79 | 1 | கூலங்கலான | கூலங்களான |
| 89 | 15 | கெகிடுன்றது | கெடுகின்றது. |
| 116 | 5 | தூர்லபம் | துர்லபம் |

நூலில் எனது பார்வைக்குத் தப்பி நிற்கும் பிழைகளை மறுபதிப்பில் திருத்த முயல்வேன்.

(நூலாசிரியர்.)

# முன்னுரை

இந்நூலாசிரியராகிய என்னுடைய அருமைச்சகோதரர் டி. எ. கோபாலஸ்வாமி நாயுடு அவர்களின் கோரிக்கைப்படி இந்த் முன்னுரையானது என்னுடைய சாதாரண தமிழில் எழுதப்பட்டுள்ளது. சாற்றும்பறை எப்படி இருந்தாலும் பின்வரும் உற்சவத்தின் மகிமை குன்றாது.

இந்நூலி லடங்கிய விலையுயர்ந்த பொருள்களை நாயுடு அவர்கள் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய கீதை, உபநிடத்துக்கள், திருவாசகம், திருவாய்மொழி, குறள், ஔவையார் வாக்கியம், திருமந்திரம், திருஉந்தியார், தாயுமானவர், ஸ்ரீமத் பாகவத புராணம், திருவிளையாடற்புராணம், தேவிபாகவதம், சிவவாக்கியர், சிவஞானசித்தியார், நவனீத கைவல்யம், வள்ளலார், திருவருட்பா முதலிய பெரிய கிரந்தங்களினின்றும் பொறுக்கி அழகிய மணியாகக் கோர்த்துள்ளார். இங்ஙனம் வேறுபட்ட கிரந்தங்களையும், சமயங்களையும், உபதேசங்களையும், சமரஸப்படுத்துந்திறமை எங்களுடைய பிரம்மஞான சபையின் தலைவர்கள் வெளியிட்ட புத்தகங்களையும் அவர்களுடைய அபிப்பிராயங்களையும் சிரத்தையுடன் கவனித்துக் கற்றவர்களுக்கு உண்டாகுவது உசிதமென்றதே எனது கொள்கை. அதற்கு இந்நூலும் ஒருபெரிய சான்றாகும்.

திரிமதச் சமரஸம், மோக்ஷத்தின் உண்மைப் பிரயோசனம், பிரவிருத்தி நிவிர்த்தி மார்க்கங்களின்

கூறு, ஞான நிஷ்டைகளின் நிர்ணயம், சாதன சதுஷ்டயத்தின் நோக்கம், யோகத்தின் சத்தியப்பொருள், முதலிய மேலானவும் முடிவானதுமான அரிய பெரிய விஷயங்கள் வெகு சுருக்கமாயுந் தெளிவாயும் இந்நூலில் அடங்கிக் கிடக்கின்றன.

தமிழ் மக்களுக்கு இந்நூல் ஒன்றிலேயே ஞானம், வைராக்கியம், பக்தி, நைஷ்கர்மியசித்தி என்று நான்காயுபதேசத்தின் பொருட்டு மட்டுமே வகுக்கப்படும், ஒரே குருபதேசத்தின் வாக்குக்கும் மநதுக்கும் அப்புறப்பட்ட விஷயமானது, வாக்கும் மநதும் எட்டும் வரையில் கூறப்பட்டுள்ளது. நம் தமிழ் சகோதரர்களும் சகோதரிகளும் இதைக் கவனித்து ஓதி நற்கதியடைய குருதேவனைப் பிரார்த்திக்கிறேன்.

தி. சதாசிவய்யர்.
(கிருஷ்ண தாஸன்)
மாஜி ஹைகோர்ட் ஜட்ஜ், சென்னை.

# நூலாசிரியரின் வந்தனவுரை.

(1)

இந்நூலிற்கண்ட விஷயங்களைச் சுருக்கமாக யான் உபந்நியாசஞ்செய்த ஒரு சமயத்தில் அக்கிராசனம் வகித்துக் களிப்பித்திய சென்னை மாஜி ஹைகோர்ட் ஜட்ஜியும், பிரம்ம ஞான சபையின் இந்தியா தேசத்து ஜெனரல் செகிரடேரியுமான, ம-ா-ா-ஸ்ரீ திவான் பகதூர், ஸர். தி. சதாசிவய்யர், Kt. M. L. அவர்கள் கருணையுடன் என் வேண்டுகோளுக்கிணங்கி "முன்னுரை" கொடுத்ததற்குப் பன்முறை யான் அவர்களுக்கு வந்தனம் செலுத்துகிறேன். இந்நூலின் 21-வது பக்கத்தில், 7-வது வரியில், "அவிச்சி என்று அதற்குப் பேர்." என்றுள்ள வாக்கியத்தை எடுத்து விடும்படியும், 'அவிச்சி' என்றதற்கு வேறு அருத்தமென்று தான் நினைக்கிறதாயும், மேற்படி எனது அருமைச் சோதரர் தமது ஆங்கில நிருபத்தில் எழுதியுள்ளார். அவர்களின் ஆக்ஞைப்படி செய்ய நான் எவ்வளவு எண்ணியும், புத்தகம் அச்சு இயந்திரத்தினின்று வெளிப்பட்டு பைண்டுக்குத் தயாராய்விட்டபடியால், நிறைவேற்ற முடியவில்லை. எனது சொந்த அபிப்பிராயங்களைச் சரியான காரணங்கண்டு மாற்றிக் கொள்ள நான் எப்பொழுதும் தயாராயிருக்கிறேன். இவ்வாறு பிழைதிருத்தமாக எனக்கு எடுத்துக் காட்டியதற்கு, எனது ஞான சகோதரரான, பக்தியே திருவுருக் கொண்ட ஸர். ஐயர் அவர்களுக்கு யான் மறுபடியும் வந்தனம் செலுத்துகின்றேன். குருதேவன், ஸர்.

ஐயர் அவர்களைப் பல்லாண்டு புவியில் உலாவச்செய்து தமிழ்நாடும், ஆரியவர்த்தமும், அதனால் பயனடைய அருள்புரிவாராக!

(2)

பிறகு, சற்று காலஹரணம் செய்தேனும் ஆங்கில பாஷையில் முகவுரை போன்று உபயோகிக்கத் தக்கவாறு எழுதியனுப்பிய திருவனந்தபுரம் காலேஜ் புலவர் ம-ா-ா-ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாசய்யர். M. A; M. R. A. S. அவர்களுடைய மதிப்புரைக்காக அவர்களுக்கு என் வந்தனங்கள் செல்கின்றன.

(3)

இந்நூலை வெளியாகச் செய்த முயற்சியில் ஊக்கங்கொண்டு மெய் வருத்தம் பாராமல் பிரயாசை எடுத்துதவிய என் அருமைச் சோதரர், ம-ா-ா-ஸ்ரீ திருமீயச்சூர்-ஆர். சுவாமி நாதய்யர் அவர்களுக்கும் என் வந்தனங்கள் செல்கின்றன.

(4)

கடைசியாய் அச்சுக்கூடத்தாருக்கும் நான் கடமைப்பட்டிருக்கிறேன். திருவல்லிக்கேணி "கோபில் அச்சுக்கூட"த்தார் என்னிடம் அன்புகூர்ந்து விரைவாயும், நேர்த்தியாயும், உற்சாகத்துடனும் என்தொண்டுக்குத் தங்களாலியன்ற உதவி புரிந்ததற்கு நான் அவர்களுக்கு வந்தனம் செலுத்துகிறேன்.

T. A. கோபாலஸ்வாமி நாயுடு,

**நூலாசிரியர்.**

# விஷய அட்டவணை.

பக்கம்.

நான்காவது அத்தியாயம்.



ஐந்தாவது அத்தியாயம்.



ஆறுவது அத்தியாயம்.

# முகவுரை.

இந்நூலிற் கண்ட விஷயம், தமிழ் ஜில்லாக்கள் சிலவற்றில் நடை பெற்ற பிரம்ம ஞான சபையின் கூட்டங்களில் என் நண்பர் சிலருடைய நியமனங்களின்படி என்னால் செய்யப் பெற்றதோர் உபந்நியாசத்தின் விரிவு. என் நண்பர் சிலர் ஆஞ்ஞாபித்தபடி இதை அச்சிட்டேன். ஆங்காங்கு கொடுக்கப் பெற்ற கால அளவுக்குத் தக்கவாறு உபந்நியாசங்களிற் சுருக்கமாகக் கூறப்பெற்றது. நண்பர்களின் நியமனங்களைக் குருதேவரின் நியமனங்களாகப் பெற்றேன்; பெற்றதால், அக்காலையிற் சகசக்தி லென்மனதில் நியாயமாயுதித்த, அதைரியங்களியாவுங் குறைவடைந்து நீங்கின. அதைரியங்களின் காரணமாவது: ஜீவன் முக்தர்கள் என்ற ஞானஸத்குருக்களோ, அல்லது அக்குருதேவர்களின் சந்நிதியில் உபதேசம் பெற்று யோக சித்திகளையுஞ் சாதனங்களையும் உலகின் க்ஷேமத்திற்காகச் செய்து வருகின்ற, ஞானசீலங்கணிறைந்த சீடர்களோ, கேட்போரின் பக்குவமறிந்து சொல்லக்கூடிய விப்பெரிது மகிமையுள்ள விஷயத்தை, யுக்திபுத்தியிலேனுஞ் சக்திலேனுஞ் சிறிதளவுஞ் சுபமாய்ப் பெற்றிலாப்பேதையெனும் யான் சொல்லத் துணிவதென்றாலது, "வான்கோழித்தன் பொல்லாச்சிறகை விரித்தாடினாற் போலுமே," யாமென்று யான் நினைந்ததே

என்க. இதிற்கண்ட விஷயங்களியாவும் பிரம்ம ஞான சபைத் தலைவரான அன்னை வஸந்திதேவியைப் போன்ற ஞானிகள் இக்காலத்தில் பிரம்மஞான சபையின் கிரந்தங்களிலும், பூர்வகால் முதற்கொண்டு சமய நூற்களிலும் வெளியிட்டிருக்கும் உண்மைகளைச் சார்ந்திருப்பனவாம். இவைகளில் குற்றங்களிருப்பின், அவைதான் எனக்குச் சொந்தம்; குணங்களிருப்பின், அவை முழுதும் மேற்சொன்ன மாதாவுக்கும் அவர்மூலமா யுலகுக்கனுக்கிரகஞ் செய்யும் மகாத்மாக்களுக்குமே சொந்தம். சன்மார்க்க நெறியை முற்றிலும் பற்ற எண்ணிலோ, வலது நெஞ்சம் இடந்தருகின்றதில்லை. உலகில் இத்தகையர் எவர், அவர் மேற்கதிபெற்றுய்யும் வழிக்கிவ்வுபந்நியாசத்திலேதேனுமொரு பாகமாவது உதவியாயின், அதுதான் எனக் களவிலாவாநந்தமளிக்கும். "நீ ஒரு சூரியனாயிருக்கக் கூடாவிடினும், தனிவழி நடக்கும் பிரயாணிக்கு வழிகாட்டுமோர் சிறுநக்ஷத்திரமாயாவதிருமின்," என்ற ஞானஸத்குரு ஒருவரின் நியமனப்படி என்போன்ற பேதையும் உலகுக்கோருதவி போலும்!

T. A. கோபாலஸ்வாமி நாயுடு, F. T. S.

*"மின்னைப்போன்றன வகிலமென் றறிந்து மெய்ப்பொருளாம்*
*உன்னைப்போனற நம்பரம்பொரு ளில்லையென் றோர்ந்து*
*பொன்னைப்போன்ற நின்போதங் கொண்டுன் பணிபொருந்தா*
*என்னைப்போன்றுள வேழையர் ஐய! இங்கெவரே."*

(தாயுமானவர்.)



ஓம்.

# மோக்ஷ மார்க்கம்.

## Path to Union With God.

"அற்றது பற்றெனில் உற்றது வீடே" (திருவாய்மொழி)

"குருவுருவங் கொண்டிக் குவலயத்தே தோன்றிப்
பருவரலை நீக்கும் பரன்." (வள்ளலார்.)

## முதல் அத்தியாயம்.

### மோக்ஷம் என்பதன் அருத்தம்.

### 1. பிண்ட ஆராய்ச்சி.

நேயர்களே!



"மோக்ஷம்" என்பது பலர் பலவாறு பொருள் படுத்தும் ஓர் சொல். "வீடு" அல்லது "விடுதல்" என்றபொருளதற்குண்டு. பிரகிருதியிற்சிக்கிக்கொண்டிருத்தல் "பந்தம்" அல்லது "அஞ்ஞானம்" என்றும், அச் சிக்கலினின்று விடுதலை யடைதல் "மோக்ஷம்" அல்லது "ஞானம்" என்றும் ஞானிகள் சொல்கின்றனர். பந்தமாமஞ்ஞானம் பேதத்தன்மைய தென்றும், மோக்ஷமாம் ஞான மபேதத்தன்மையதென் றும் விளங்கும். தூலசூக்கும, காரண சரீரங்களைத்தா

னெனக் கருதுவதா லுண்டாகின்ற வகங்காரத்தையும், அதன் செயலான மமகாரத்தையும் பெற்றுத் தோன் றற்றிரிதன் முதலான வறுவகை விகாரங்கட்குச் சம் பந்தமாதலே பேதத்தன்மை; அதுவே அஞ்ஞானம்; அதுவே பந்த மென்பர். அச்சரீரங்களைத் தானெனுமெ ற்றன்னுடைய கவசங்க ளென்றோர்ந் துணர்ந்து வகங் கார மமகார பாவனைக ளொழிந்து விகாரங்கட் கடந்து த்தான் ஆன்மா வென்றறிதலே அபேத த்தன்மை; அதுவே ஞானம்; அதுவே மோக்ஷமென்பர்,

"அச்ச மாங்கார மகத்தடக்கினற் பின்னை
நிச்சயமா மீச னிலை" (ஔவையார்.)

பேதத்தன்மை=பிரதக்நிலை; அபேதத்தன்மை=ஐக்ய நிலை, என்றும் பொருளமையும். நான், நீ, அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அது, இது, உது வெனும் விவகாரங்களே பிரதக்நிலை. உலக விவகாரங் களினிடையி லவை முழுதுந்தன் கோசங்களின் கோளா றுகளென்றும், தன் நிஜமான நிலையல்ல வென்றும், "விவகாரவேளைவெலாஞ்சமாதி" என்றபடி உள்ளு ணர்வு பெற்றிருத்தலே ஐக்கியநிலை. பிரதக்நிலை'அநேக' மென்றும், ஐக்கியநிலை "ஏக" மென்றுஞ் சொல்வர். அநேகம்=பல; ஏகம்=ஒன்று, என்றும் பொருளமை யும். "ஒன்று" எனு மெண்ணின் பேரிலே யதற் கதிகமான "பல" எனு மெண்களெல்லா மமைந்திருக் கின்றன. ஒன்றென்பதில்லையேல், இரண்டு, மூன்று, பத்து, நூறு, ஆயிரம், பலவென்பதற்கிடமில்லை. இது சகசநடை. ஆகையால் அநேகமாவதெலாம், ஏகத் தைப்பற்றி யிருக்கிறதென்றும்; பிரத்யக் நிலையானது

ஐக்கியநிலையைப்பற்றி யிருக்கிறதென்றுஞ் சொல்லாமல் விளங்கும். பிருதக்நிலை, அல்லது அநேகம், அல்லது பலவென்பது அநாத்மாவென்றும், ஐக்கியநிலை, அல்லது ஏகம், அல்லது ஒன்று, என்பது ஆத்மாவென்றும், ஆத்மாநாத்ம விவேகத்தின் துணிவாதலின், அநாத்மாவானது ஆத்மாவைப்பற்றி யிருக்கிறதென்றுஞ் சொல்லாமல் விளங்கும். அநாத்மா மெய், வாய், கண், மூக்கு, செவியென்னு மைவகைக்கரணங்களும், அவைகட்காதாரமான பூதமும், அவைபோன்ற பிராகிருத சரீரங்களுமாம். ஆத்மா பரமாத்மாவி னம்சம் அல்லது பொறியாம். ஆத்மாவைப்பற்றித் தான் சரீரங்களிருக்கின்றன, அவை சுபேச்சையாயில்லை யென்பதற்கும் ஆத்மா பரமாத்மாவி னம்சமென்பதற்கும், உபநிடதம் கீதைகளில் ஆதாரங்களுண்டு.

"வாக்கி னுதவியின்றி யதனைத்தானுண்டாக்குகிறதாயும்; கண்ணி னுதவியை நாடாமற்றன்னிடமிருந்தே கண்ணிற்குத் திருஷ்டியைத் தருகிறதாயும், மநதி னுதவியை நாடாம லதற்கேதான் பிறப்பிடமாயும்; காதி னுதவியை நாடாமலதற்குச் சப்தத்தை யறியுஞ் சத்தியைத் தான் தருகிறதாயும், ப்ராணனி னுதவியை நாடாமற்றானே யதற்கிருப்பிடமாயு முள்ளதே பிரஹ்மம். (ஆத்மா.)"

(கேனோபநிடதம் அத். 1. சுலோ. 4 to 8.)

"ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनः षष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥"

= என்னுடைய அம்சம், ஜீவலோகத்தில் நித்தியமான ஜீவபூதமாகி பிரகிருதியால் மூடப்பெற்று, மனதை ஆறு

வதாயுடைய கரணங்களை யாகர்ஷிக்கிறது.'' (பகவத் கீதை அத். 15. சுலோ. 7.) அனேகத்தினிடையி லேகத்தையும், எல்லாவற்றிலு மேகமாயுள்ள வாண்மா வையும் பார்த்தல்,

''எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'' (குறள்.)

என்ற ஐக்யநிலை நம்மிலனேகர்க்குப்பேச்சிலும், நினைவிலு மட்டுமே (அனுமானமாத்ரமே)யன்றி யுள்ளுணர்வில் (பிரத்யக்ஷத்தில்) இல்லை. பிரத்யக்ஷத்தில் பெறுவது தான் சிறந்த ஞானமும் மோக்ஷமுமாம் :—

सर्वभूतेषुयेनैकं भावमव्ययमीक्षते ॥
अविभक्तं विभक्तेषुतज्ज्ञानं विधिसावत्किम् ॥

= எல்லா வஸ்துக்களிலும், அழிவில்லா வேக வஸ்து வைப் பேதத்தினிடையில் அபேதமாயிருக்கிற தென்று பார்க்குஞ்ஞான மெதுவோ அந்த ஞானந்தான் (சிறந்தது) ஸாத்விகம், என்றறி.''

(பகவத்கீதை அத். 18. சுலோ. 20.)

'' நான் தேவன்; நான் அரசன்; இவை யெலாம் நானே யென்ற உணர் வுண்டாகும்பொழுது, அவன் உயர்வற வுயர்நிலை யடைந்தவனாகிறான்.'' (பிரக தாரண்யகோபநிடதம் அத். 4. ப்ரா. 3.)

இவ்வாறு, அனேகத்தினிடையில் ஏகத்தை அல்லது ஐக்கியத்தை யுள்ளுணர்விற் பெற்றிருத்தல்; அல்லது எல்லாவற்றிலும் ஆன்மாவைப் பார்த்தல், மோக்ஷமென்று ஆதாரங்களுடன் கண்டோம். இது அத்யாத்மிகமான, அதாவது பிண்டத்தின் மூலமான ஆராய்ச்சியென்ற ஆத்மஞான மெனலாம். கோசங்களைத் தானல்லவென்று

ஒன்றன்பின்னொன்றாய்த் தள்ளித் தன்னைத்தான் பார்க்கும் வழியிது.

---

## 2. அண்ட ஆராய்ச்சி.

மற்றோர்விதஞ் சொல்லப்புகின், இவ்வைக்கிய, அல்லது ஏகநிலைக்கு பரப்ரஹ்மம், பரமாத்மாவென்றும்; மகா விஷ்ணுவென்றும்; சதாசிவமென்றும்; பரலோகத்திலுள்ளப் பிதாவென்றும்; அல்லாவென்றும், அஹுரமஸ்டா வென்றும், இன்னும் பலவாறு பல பாஷைகளிற் பல்வேறு சமயங்களிற் பெயர்களுண்டு. அந்தந்த மதத்தில் பரத்துவநிர்மாணஞ் செய்யப்பெற்றவையே மேற்சொன்ன பெயர்களியாவும். இப்பரத்துவம் எல்லா மதங்களின்படியும் "ஒன்றே, இரண்டல்ல." ஒன்றேயெனும் பரம்பொருள் திரிமூர்த்திகளாயு மனேகமாயுமாயிற்று. பரம்பொருள், அல்லது பரமாத்மா ஆக்கல், காத்த லழித்தலெனு முத்தொழிலுஞ் செய்யுமொன்றாகித்தான் யாவற்றிற்கு மாதாரமாயுளது.

"இச்சைவைத் துயிர்க்குயிராய்த்தழைத்தது"

(தாயுமானவர்)

"ஒன்றதா யிச்சாஞானக் கிரியை யென்றொரு மூன்றாகி, நின்றிடுஞ் சத்தியிச்சை யுயிர்க்கருணேசமாகும் நன்றலாஞான சத்தியான யந்தறிவனுதன் அன்றருட் கிரியை தன்னாலாக்குவனகில மெல்லாம்" (சிவஞான சித்தியார்.)

எல்லாவற்றிற்கும் பரமாத்மாவே யாதாரம். அவனின்றி யோரணுவு மசையாது. அணுவிலும் மேருவிலு மவனுளான். "ஓரணுவினைச் சதகூறிட்டக்

கோணிலுமுளன்." பரமாத்மாவானவன் அண்டபிண்ட சராசரங்களிற் கரைந்து, நீக்கமற நிறைந்து, எங்கு மண்டங்கடந்த அப்புறத்தும் பரந்துளன்.

" விண்ணிறைந்து விளங்கும், சுடரொளிபோல்
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம்." (ஔவையார்.)

உருவங்களி யாவுமவனுருவங்கள். அருவங்களி யாவு மவனருவங்களே. ஏழுலோகங்களும், ஏழுதலங்களுமான விப்பிரம்மாண்டமானது அவனுடைய வோர் கிரணத்தால் (அம்சத்தால்) ஆளப்பட்டு வருகிறது.

" अथवा बहुनैतेन किं ज्ञानेनतवार्जुन ।
विष्टभ्याहमिदंकृत्स्नमेकांशेन स्थितोजगत् ॥

ஓ அர்ஜுனா! உனக்கு இவ்வெல்லா விபரங்களைப் பற்றிச் சொன்னதாலுண்டான ஞானம், எம்மாத்திரம்? என்னுடைய ஒரு அம்சத்தால் இவ்வண்ட முழுதும் நிறைந்து, நான் (அப்புறத்தும் பரந்து) நிற்கிறேன்."

(கீதை அத் 10 சுலோ 42.)

" அண்டமனைத்தினு மாயப்பாலுக்கப்பாலுங்,
கொண்ட நின்னை யாரறிந்துகொள்வார் பராபரமே "
(தாயுமானவர்.)

இவ்வொரு அண்டத்தைப்பற்றின வரையிலும் பரத்துவமான பரமாத்மாவைப் பற்றிப்பேசினு மவர், பூ, புவர், சுவர், மகர், ஜனோ, தபோ, ஸத்யலோகங்களைத் தன் சரீரங்களாயுடையவர். அவர் பிரக்ஞைக்குள் இவ்வெல்லா லோகங்களும் அகப்பட்டுள்ளனவாம். அவர் சத்சித் ஆநந்தர். எல்லாமதங்களும் அவரையே

பரத்துவங்கூறும் மதங்களிற் சொன்ன வர்ணனைகளி
யாவு மவர்க்கே. ஒரு பிரஹ்மாண்டத்து நாய
கன் அல்லது ஈசுவரன் அவர்; ஈசுவரனைச் சாலோக,
சாமீப, சாரூப, சாயுஜ்ய மென்ற நிலைகளில் கிட்டுவது,
அடைவது தான் இந்த பிரம்மாண்டத்திலுள்ள ஜீவர்
களின் வீடு அல்லது மோக்ஷமாகும். ஜீவனுக்குச் சரீரங்
களெவ்வாறோ அவ்வாறே ஈசுவரனுக்கும் லோகங்கள்.
ஜீவன் ஈசுவரனுடைய அம்சமென்று முன்னரே பார்த்
தோம். அப்படியே சரீரங்களும் லோகங்களின் அம்
சம். பஞ்சபூத சரீரங்களைக் களைந்து திவ்ய சரீரத்
துடன் ஈசுவரனை யடைதல் மோக்ஷ மென்பர். பூமி
யில் பிரயாணம் செய்ய வேண்டுமானால், வண்டியும்,
ஜலத்தில், மரக்கலமும், வானத்தில், ஆகாய விமான
மும் பிரயோசனமாம். ஒரு தத்துவத்திற்காக வமைக்
கப்பெற்ற வாகனத்தைக் கொண்டு மற்றொரு தத்துவத்
தில் யாத்திரை செய்ய முடியாது. அதாவது, ஆகாய
விமானமும், மரக்கலமும் பூமி யாத்திரைக் குதவா;
வண்டியும், ஆகாய விமானமும் ஜலயாத்திரைக் குதவா;
மரக்கலமும், வண்டியும் வானயாத்திரைக் குதவா.
அதுபோன்று, மேற்சொன்ன லோகங்களிற் சஞ்சரிக்
கிறதற்காக வற்பட்ட சரீரங்களைக்கழற்றி ஈசுவரனின்
சுயமான லோகத்திற்கான திவ்விய சரீரத்துடன்மட்டும்
அவனருகிற்செல்ல வேண்டும். ஈசுவரனுடைய உடம்பின்
அணுக்களே நாமெல்லோரும். அவன் யாவற்றிலும் நம்
மிலுமுளன். அவனிடம் நாமும் மற்றியாவுமுள வென்
றறிதலே மோக்ஷம். பஞ்சபூத சரீரங்களால் அவனைக்
கிட்ட முடியாது

"மனத்தோ டுறுபுத்தி யாங்காரஞ் சித்தம்
அனைத்தினு மில்லை யது."

(ஒளவையார்)

அப்ராகிருத சரீரத்தால் கிட்ட முடியும். வாக்முதலிய இந்திரியங்களாலும் உணரப்படவெளியனன்று அம்மகாத்மா.

"பூதங்களல்ல பொறியல்ல வேறு,
புலனல்ல வுள்ளமதியின்,
பேதங்களல்ல வினையன்றி நின்ற,
பிறிதல்ல வென்று பெருநூல்,
வேதங்கிடந்து தடுமாறும் வஞ்ச,
வெளி யென்பகூடன் மறுகில்,
பாதங்களேவ வளையிந்தனுதி,
பகர்வாரை யாவு மவரே."

(திருவிளையாடற் புராணம்.

"மந நக மல மற மலர்மிசையெழுதரு,
மந நுணர்வளவிலன் பொறியுணர் வவையிலன்.
இந நுணர் முழுநல னெதிர்நிகழ் கழிவினு,
மினனில னனனுயிர் மிதநவையிலனே."

(திருவாய்மொழி.)

"உலகுக்கு ரக்ஷகனும்; யாவற்றிலும் ஊடுருவி நிற்கு மண்டத்து நாயகனும்; பிரஹ்மருஷிக்களாலும், உயர் தேவர்களாலும் ஆசிரயிக்கப் பெற்றவனுமான, அவனை யறிகிறவன் மரணரூபமான பந்தத்தை யறுக்கிறான். வெண்ணெயி னெய்யைப் போன்றதி சூக்குமமாய்ச் சகலத்தினிடமுங் கலந்திருக்கின்ற, அண்டத்திலூடுருவிநிற்கு மேகன், மங்களகரனெனு மீசுவரனைப் பார்க்கிறவ னெல்லா பந்தங்களினின்றும் விடுதலே யடைகிறான். பிரஹ்மாண்டத்தை யுண்டாக்கின கடவுளுஞ்

சர்வபூத இதயமத்திய வாசியுமான வப்பரம புருஷன், இலகியுந்தூய நெஞ்சினாலும், விவேகத் தியானத்தாலும் (ஆத்மவுணர்வால்) அடையப் பெறுகின்றனன்; அவனை யறிகிறவன் முக்தியினைப் பெறுவன்.” (சுவேதாசுவதரோப நிடதம் அத். 4.) என்பது. ஆத்மா தான் ஈசுவரனை யறிய சாத்தியம்.

“ ...உன்னையுன்னைக் காண்பதல்லால் என் அறிவாற்
காணப்போமோ...........” (தாயுமானவர்.)

என் அறிவால்—என்மநந் அகத்தால்.

ஈசுவரத்தன்மையுள்ள ஆத்ம தத்வமே ஈசுவரனை யறியும் என்றதைச் சூசனையாய்க் கீதையி லர்ஜுனன், “**स्वयमेवात्मनाऽऽत्मानं वेत्थ**, = நீயே உன்னை உன்னால் (ஆத்மாவினால்) அறிவாய்—ஆத்மாவினால் தான் ஆத்மா (பரமாத்மா) அறியப் படுகிறான்.” என்று சொன்னார். இவ்வாறு விராட் சொரூபியான ஈசுவரனை யாராதிக்க நாடல் மோக்ஷமென்று ஆதாரங்களோடு பார்த்தோம். இது பரமாத்மிக ஞானமெனலாம்; அண்டத்தின் மூலமான வாராய்ச்சி யெனலாம்; ப்ரஹ்ம ஞான மெனலாம். ஆனால், பிரஹ்மஞான மென்றாலுஞ் சரி, ஆத்மஞானமென்றாலுஞ் சரி; அண்டத்தி னாராய்ச்சி யென்றாலுஞ்சரி, பிண்டத்தி னாராய்ச்சி யென்றாலுஞ்சரி; பரமாத்மிக மென்றாலுஞ்சரி, அத்தியாத்மிக மென்றாலுஞ்சரி; ஈசுவர சாக்ஷாத்காரம் என்றாலுஞ்சரி, தன்னைத்தானறித லென்றாலுஞ்சரி, ஒரே விஷயத்தைத் தான் குறிப்பிடுகின்றது.

“ அண்டத்திலுமிந்தவாறென் றறிந்திடு
பிண்டத்திலுமதுவே பேசு.”

(ஔவையார்.)

தன்னைத்தானறிய வேண்டுமென்கிறவர், அந்தத்தானென்பது நான் என்றதான ஈசுவர அம்சமானதால், தன்னிலீசுவரனையும், தன்னை ஈசுவரனினும், அதாவது உலகத்திலுள்ள யாவரையும், யாவற்றையுந்தானே என்று, உள்ளுணர்வில் பார்க்கவேண்டுமென்றதை மறந்துவிடக் கூடாது. அண்டத்தைப்பற்றின வாராய்ச்சியினு லீசுவர சாக்ஷாத்காரம் பெறவேண்டுமென்கிறவர், தானே யவ்வீசுவரன்; அதாவது தன்னிடமே அண்டகோசங்களின் சக்திகளும், ஈசுவரனின் எல்லா கல்யாண குணங்களும் வித்தாயுள்ளன என்றதையும், தன்னைப்போன்ற மற்றவர்களிடத்தும், மற்றவைகளிடத்தும் அச்சக்திகளும் கல்யாண குணங்களும் வித்தாயும், மலர்ந்துகொண்டு மிருக்கின்றன என்றதையுந் திட்டமாய் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

"सोऽहं." "அது நான்." "अहं सः." "நான் அது." என்றது மேலே யுணர்த்தப்பெற்றது.

"நான் ப்ரஹ்மம்." "பிரம்மமான நான் இச்சிருட்டிப் பொருள்களியாவுமாகின்றேன்."

(பிரகதாரண்யகோபநிடதம்.)

---

## 3. திரிமதச் சமரஸம்.

இதுவரையில், மேலே சொன்ன மோக்ஷமென் பதைப்பற்றின விபரங்கள், அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத பரமாய் வேதாந்த தரிசனத்தில் பேத அபிப்பிராயங் கூறப்படுவதற் குள்ளாகின்றன. அத்வைதத்தின்படி சீவனும் ஈசுவரனும் ஒன்றெனலும், சீவன் ஈசுவரனாதல், அதாவது ஆத்மா,பரமாத்மாவி விரண்டறக் கலத்தல் மோக்ஷமெனலுமாம். விசிஷ்டாத்வைதத்தின்படி சீவனு மீசுவரனும் வேறெனலும்; சீவன் கரியாவு மொன்றெனலும்; சீவன் ஈசுவரனையடைந்து பின்னரவனின் கல்யாண குணங்களிற்றன்னை மறந்து, ஆனந்த மனுபவித்துக்கொண் டிருத்தல் மோக்ஷமெனலுமாம். த்வைதத்தின்படி சீவன், ஈசுவரன் வேறென்றும்; சீவன்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு விதங்களென்றும்; சிலர்கள் தத்தமக்குள்ள வித்தியாசத்துடனே, ஈசுவரனிடம் ஆனந்த மயமாயிருத்தல் மோக்ஷமென்றும் ஏற்படுகிறது. இம்மூன்று அபிப்பிராயங்கட்கும் பின்வரும் மூன்று பாட்டுகள் முறையே பொருத்தமா யிருக்கலாம்:

அந்தப்பாத்தோ டாண்டற் றயிக்கமா
மந்த நன்னிட்டையே யுந்தீபற
அத்துவிதவீடேன் றுந்தீபற.

(அவிரோதவுந்தியார்.)

ஊனாயுயிரா யுணர்வா யென்னுட்கலந்து தேனாயமு தாய்த் தீங்கரும் பின்கட்டியுமாய் வானோரறியா வழி யெமக்குத் தந்தருளுந் தேனேர் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேரானா வறிவா யளவிறந்த பல்லுயிர்க்குங் கோனாகி நின்றவா கூறுதுங் காணம்மானாய்.

தன்னைத்தானறிய வேண்டுமென்கிறவர், அந்தத்தானென்பது நான் என்றதான ஈசுவர அம்சமானதால், தன்னிலீசுவரனையும், தன்னை ஈசுவரனினும், அதாவது உலகத்திலுள்ள யாவரையும், யாவற்றையுந்தானே என்று, உள்ளுணர்வில் பார்க்க வேண்டுமென்றதை மறந்துவிடக் கூடாது. அண்டத்தைப்பற்றின வாராய்ச்சியினு லீசுவர சாக்ஷாத்காரம் பெறவேண்டுமென்கிறவர், தானே யவ்வீசுவரன்; அதாவது தன்னிடமே அண்டகோசங்களின் சக்திகளும், ஈசுவரனின் எல்லா கல்யாண குணங்களும் வித்தாயுள்ளன என்றதையும், தன்னைப்போன்ற மற்றவர்களிடத்தும், மற்றவைகளிடத்தும் அச்சக்திகளும் கல்யாண குணங்களும் வித்தாயும், மலர்ந்துகொண்டு மிருக்கின்றன என்றதையுந் திட்டமாய் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

"**सोऽहं**." "அது நான்." "**अहंसः**." "நான் அது." என்றது மேலே புணர்த்தப்பெற்றது.

"**நா**ன் ப்ரஹ்மம்." "பிரம்மமான நான் இச்சிருட்டிப் பொருள்களியாவுமாகின்றேன்."

(பிரகதாரண்யகோபநிடதம்.)

## 3. திரிமதச் சமரஸம்.

இதுவரையில், மேலே சொன்ன மோக்ஷமென்பதைப்பற்றின விபரங்கள், அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத பரமாய் வேதாந்த தரிசனத்தில் பேதவபிப்பிராயங் கூறப்படுவதற் குள்ளாகின்றன. அத்வைதத்தின்படி சீவனும் ஈசுவரனும் ஒன்றெனலும், சீவன் ஈசுவரனாதல், அதாவது ஆத்மா பரமாத்மாவி லிரண்டறக் கலத்தல் மோக்ஷமெனலுமாம். விசிஷ்டாத்வைதத்தின்படி சீவனு மீசுவரனும் வேறெனலும்; சீவன் சரீரமாவதொன்றெனலும்; சீவன் ஈசுவரனையடைந்து பின்னரவனின் கல்யாண குணங்களிற்றன்னை மறந்து, ஆனந்தமனுபவித்துக்கொண் டிருத்தல் மோக்ஷமெனலுமாம். த்வைதத்தின்படி சீவன், ஈசுவரன் வேறென்றும்; சீவர்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு விதங்களென்றும்; சீவர்கள் தந்தமக்குள்ள வித்தியாசத்துடனே, ஈசுவரனிடம் ஆனந்த மயமாயிருத்தல் மோக்ஷமென்றும் எற்படுகிறது. இம்மூன்று அபிப்பிராயங்கட்கும் பின்வரும் மூன்று பாட்டுகள் முறையே பொருத்தமாயிருக்கலாம்:

அந்நப்பாத்தோ டிண்டற் றயிக்கமா
மந்த நன்னிட்டையே யுந்தீபற
அத்துவிதவீடேன் றுந்தீபற.

(அவிரோதவுந்தியார்.)

ஊனாயுயிரா யுணர்வா யென்னுட் கலந்து தேனாயமுதமுமாய்த் தீங்கரும் பின்கட்டியுமாய் வானோரறியா வழி யெமக்குத் தந்தருளுந் தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளி சேரானா வறிவா யளவிறந்த பல்லுயிர்க்குங் கோனாகி நின்றவா கூறுதுங் காணம்மானாய்.

வர் கண்டிக்கப்பெறுஞ் சித்தாந்தத்திற் கனுசரணையா யெதிர்வாதிடுகிறதுமில்லை. தான் கண்டித்த சித்தாந்தத்தை யுலகில் பரவச்செய்யத்தனக்குச் சமத்துவமான ஞானமுள்ள ஒருவர் தோன்றும்போது, அல்லது தோன்றினபோது, கண்டனஞ்செய்தவர் தோன்றுவதுமில்லை. இச்சமாதானங்களால், மற்ற சித்தாந்தங்களி னுண்மைகளைத்தான் ஒரு சித்தாந்தத்தின் மூலாசாரியர் கண்டித்தாரென்று நினைக்க எள்ளளவும் இடமில்லை. யாதாமொரு சித்தாந்தத்தை யொரு ஞானசிரியர் உலகில் ஸ்தாபிக்குங் காலத்தில், அச்சித்தாந்தத்தைக் கண்டித்த வாசிரியர் வாராததாலும், தன்னால் ஸ்தாபிக்கப்பெற்ற சித்தாந்தத்தை மற்றொருவர் கண்டிக்கும்போது அதைத் தடுக்க, கண்டிக்கப்பெறும் சித்தாந்த வாசிரியர் வாராததாலும், ஞானசிரியர்களுக்குள் விரோதமில்லை யென்றும், அவ்வக்காலத்திலுள்ள மனிதர்களின் சக்திக்குத் தக்கவாறு அவர்கள் ஆந்மோஜ்ஜீவனம் பெற்று வீடடைவதற்கோர் சித்தாந்தம் ஸ்தாபனமாதலும், மற்ற சித்தாந்தங்களிரண்டின் கெட்டுப் போனபாகங்கள் கண்டனத்திற்குள்ளாதலு மவசியமென்று பூர்வாசாரியர்களே தங்களுக்குள் ஒற்றுத் தீர்மானித்துக்கொண்ட விஷயமென்றும், மேற்சொன்னவற்றால் விளங்கும். பூர்வாசாரியர்கள் காலத்துக்குப் பின்னும் அவர்கள் தோன்றினதற்குச் சிறிது முன்னுஞ் சித்தாந்தங்கள் ஒழுங்கான முறையிலிருப்பதில்லை என்று இன்றைக்கும் யாவருமறிவர். ஆகையால், சித்தாந்திகள் மற்ற சித்தாந்தங்களைக் கண்டனஞ் செய்யும்பொழுது மட்டும், தம் வழியினின்றுத் தவறினவராகிறது மன்றித்தம் சித்தாந்தத்தில் தமக்குச்சரியான தெளிவும் நம்

பிக்கையுமில்லாததைத் தாமே காட்டிக் கொண்டவரு மாகிறார். சித்தாந்தங்கள் மூன்றும் வித்தியாச முள்ளன வாய்க் காணப்படினும், அவை யுண்மையில் ஒரே விஷ யத்தை மூன்று விதங்களாய்ச் சொல்லும் "சமரஸங்" களே யென்றுப் பக்ஷபாதங்களற்ற ஆழ்ந்த கருத்துக் குத் தோன்றும். எப்படியெனில், அவைகள் சொல்லும் ஜீவேசுவர பேதாபேதங்களும், ஐக்கிய மும் ஐக்கியமற்ற நிலைகளும் அவாங்மனோ கோசரமான, அப்பிராகிருத மான, ஆத்மலோகத்தைப் பற்றின உண்மைகள். அவ் வுண்மை நிலையானது மனதினமைப்புக்குத் தக்கவாறு பேத அபேதங்களாகத் தோன்றும். இதனுற் குற்ற மில்லை. சாதாரணமாய்ச் சங்கற்ப விகற்பங்களுக் கும் மேற்பட்ட மனநிலையே ஒன்றாயும், ஐக்கியமா யும், அபேத நிலையாயுந் தெரியுமாதலின், ஆத்ம பர மாத்ம விஷயம் மனோநிலைக்கு எவ்வளவோ மேற்பட்ட தால் அது ஐக்கியமே யென்றும் அபேதமே யென்றும் அத்வைத பரமாய்த் தீர்மானங் கொள்வது சுலபமா னது; உண்மையுமானது. நிற்க, பரம் பிரம்மம் அல் லது மகாவிஷ்ணு அல்லது சுத்தசிவம் எண்ணிறந்த பிரம்மாண்டங்களைத் தன்னுள் ளடக்கிக்கொண்டிருக்கிற தென்றதாலும், ஓர் அண்டம் பிரளயமாகும்பொழுது, அதன் ஈசுவரன் (பிரம்மா, விஷ்ணு, சிவன்) பரம் பிரம்மத்தி லொடுங்குகிறாரென்றதாலும், காலச் சக் கரஞ் சுழன்று மேற்சென்று கொண்டிருக்கும் நிலை, (அதாவது, ஆத்மாக்கள் நிமிஷங்கள்தோறும், நாழிகை கள்தோறும், தினங்கள், வாரங்கள், மாதங்கள், அய னங்கள், வருஷங்கள்தோறும், யுகங்கள், மகாயுகங்கள், கல்பங்கள்தோறும் அளவிலகப்படாமல் தம்மிடம் குப்த

மாயுள்ள சக்திகளை மலரச் செய்துகொண்டு, மண், புல் பூண்டு, மிருகம், மனிதர்கள் என்ற படிகளில் ஒன்றன் பின்னொன்றாய் மேல்சென்று, தேவராகி, இருடிகளாகி, ஓரீசுவரனுமாகிப் பின்னும் உயர்வற வுயர்நலப் பதங்கள் பலவுங் கிட்டிக்கொண்டே முடிவென்பது காணமல் மேலே சென்றுகொண்டிருக்கும் மார்க்கம்) நித்தியமாயிருக்கிறதென்று விளங்குகின்றது.

"இப்பிரம்மாண்டத்தைச் சூழ்ந்து, இதே விதமான வேறு அநந்தகோடிப் பிரம்மாண்டங்கள் தத்தம் ஆவரணங்களுடன் சோபிக்கின்றன. சதுர்முக, பஞ்சமுக, ஷண்முக, ஸப்தமுக, அஷ்டமுக வென்று படிப்படியாய் ஸஹஸ்ர முகங்களுள்ள நாராயணனுடைய ரஜோகுணம் நிறைந்த அம்சங்கள் ஓரோர் பிரம்மாண்டத்தின் சிருட்டி கர்த்தாக்களா யிருக்கின்றனர். நாராயணம்சங்களான, ஸத்வ, தமோ குணங்கள் நிரம்பியுள்ள விஷ்ணு, சிவர்களும் ஸ்திதி, ஸம்ஹாரத் தொழில்களைச் செய்துகொண்டு அப்பிரம்மாண்டங்களி லிருக்கின்றனர். இப்பிரம்மாண்டங்கள் கடல் மீன் கூட்டங்கட்போலும் கடல் நீர் குமிழிகள்போலும் அங்குமிங்குந் திரிகின்றன."

(ஆதர்வண மகாநாராயணோப நிடதம் 6.)

"மணல்கள் எண்ணிக்கைக்ககப்படல் ஒருவேளை சகசமாகலாம், ஆனல் பிரம்மாண்டங்களுக்குக் கணக்கேயில்லை. ஆகையால் பிரமன், விஷ்ணு, சிவன் மற்றவர்க்குங் கணக்கேயில்லை. பிரம்மாண்டம் ஒவ்வொன்றுக்கும் ஓரோர் பிரமன், விஷ்ணு, சிவன் மற்ற தேவர்களும் உண்டு."

(தேவி பாகவதம். IX. iii. 7. 8.)

"रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवा व्यक्त संज्ञके॥

—பிரளயகாலத்திலவர்கள் அவ்வியக்தமென்ற அந்த ஒன்றில் (பரத்தில்)கூட லயமாகின்றனர்."

(பகவத்கீதைஅத் 8. சுலோ. 18.)

"ஜீவன் கருமத்தால் இந்திரனாகலாம், பிரஹ்மாவின் புத்திரனாகலாம்; கருமத்தால் ஸாலோக முதலிய விஷ்ணு பதங்களைப் பெறலாம்; சிவன் முதலானவராகலாம்."

(தேவி பாகவதம் IX. (27.) 18-20.)

இம் மேற்கோள்களா லேற்படும் விஷயம் யாதெனில் மோக்ஷமென்பதில்ஒரு பிரம்மாண்டவீசுவரன்கூடத் தன் பிரளயகாலத்தில் பரம் பிரம்மத்தில் மேனோக்கிச் சென்றுகொண்டேயிருக்கிறானென்பதும், எவ்வளவு உயர்வோனாயினும் தான் பரம் பிரம்மத்தின் முடிவு காணக்கூடியனல்லனாதலின், தானுந் தன்னைப் போன்ற மற்றவர்களும்—ஒரு அண்டம் அல்லது பல அண்டங்களின் ஈசுவரர்களாயினுஞ் சரி—பிரத்தியேகாத்மாக்களே என்பதும், தீர்மானமாம். ஆகையால், விசிஷ்டாத்வைத பரமான தீர்மானம், அதைவிட இன்னும் அத்வைத பரமான தீர்மானமே உண்மையை விரிவாய் விளக்கச் செய்கிறதென்று கூசாமற் சொல்லலாம். மேலும் மூன்று சித்தாந்திகளும் அவாங்மனோகோசரமான தத்துவத்தில் பேத வபிப்பிராயங்கட் கூறுவாரேயன்றி, அந்தப் பதத்துக்கு மனிதனைத் தயாரிக்கின்ற, இந்திரிய மனோ நிக்கிரகங்கள் முதலான ஸாதனங்களைப்பற்றிப் பேதிக்கிறார்களில்லை. ஆகையால், மூன்று சித்தாந்தங்களும் அவாங்மானஸ கோசர

தத்துவத்தைப்பற்றி சொல்லும்பொழுதும், சாதனங் களைப்பற்றி சொல்லும்பொழுதும் உண்மையில் பேத வபிப்பிராயங்களுள்ளனவல்ல வென்றும், சமரஸ மாகத்தா னிருக்கின்றன வென்றும் பக்ஷபாதமற்ற ஆழ்ந்த கருத்துக்குத் தோன்றுமென்றது. நான் எந்த சித்தாந்தத்தையும் தழுவுகிறவனல்லேன். என் சித் தாந்தம் :—“सत्यमेवजयतेनानृतं= ஸத்யமேஜயம் மற்ற தல்ல” என்றதே. “सत्यान्नास्तिपरोधर्मः = ஸத் யத்தினும் மேலான மதமில்லை” என்றதே என் கொள்கை. அதாவது உண்மை விசாரணைசெய்ய வேண்டுமென்றதே நான் பற்றியுள்ள மதம், அல்லது வழி. யாதாமொருபந்த நிவர்த்தியே மோக்ஷமென்பது. நம் யாவருக்கும் இம்மூவுலகு சம்பந்தமாய் நாம் கட்டு பட்டிருக்கும் ஜனனமரண சக்கரத்தினின்று மீளல் மோக்ஷமாம்.

“பிறப்பறுக்க வீடாம் பேருவமையின்றி
அறுத்தருவ மாற்றியிரு.” (ஔவையார்.)

அதற்குமேல் சீவன் ஈசுவரன், ஒன்று அல் லது இரண்டு என்ற நாட்டங்க ளெவ்வாறுயினுங் குற்றமில்லை. குற்றமெல்லாம் பிறர் அபிப்பிராயங்களைக் கண்டனஞ் செய்வதிலும் துவேஷிப்பதிலுமே யுள்ளது. பூர்வாசாரியர்கள் சொன்ன சாதனங்களை (சிஷ்டாசாரங் களை) யனுஷ்டிப்பதால்தான் அவர்களுக்குத் திருப்தி யுண்டாக்கலாமே யல்லது, வாதங்கட் செய்வதால் திருப்தி யுண்டாக்க முடியாது.

---

## 4. தவறானதோர் கொள்கை.

மோக்ஷமென்பதைப் பற்றிச் சிலர், 'அது உலக துன்பங்களுக்குச் சம்பந்தமற்ற இன்பவடிவாயுள்ள வேறோர் உலகின் மூலையில் தனிமையி லனுபவிக்கப்படு மாநந்தமென்று நினைக்கின்றனர். இது தவறான அபிப்பிராயம். ஆனால் அத்தகைய ஓர் நிலையுமுண்டு. அவிச்சி, என்று அதற்குப் பேர். ஜனன மரணமென்ற அல்லல் நீங்கிச் சுகம்பெற வேண்டுமென்ற விச்சையாலும், ஜனன மரணங்கள் உபத்திரவங் (கஷ்டங்)களைத் தருகின்றன வென்ற பயத்தாலும், அவைகளினின்றுத் தப்புவிக்குஞ் சுயநல நாட்டத்துடன், உலக விஷயங்களில் வெறுப்பு (நிராசையல்ல) அடைந்து, விஷய இச்சைகளைப் பலாத்காரமா யறுத்துத்தள்ளி, ஜீவகாருண்யம் அன்பு என்றதைப் பெறாமல், யாதாமொரு யோகாப்பியாசஞ் செய்கிறவன்,

"அஞ்சும் அடக்கு, அடக்கு என்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கில் அசேதமாம்" (திருமந்திரம்.)

என்றபடி மரணாந்தகாலத்தில் யாதொரு விஷய இச்சையில்லாததால் மறுபடியும்ஜனிக்கிறதில்லை. ஒருகல்பகாலம் வரையில் தன் பாவனைக்கொத்ததோர் ஆநந்தத்தைத் தனியான தோர் நிலையி லனுபவித்துக்கொண்டிருக்கிறான். கல்ப முடிவில், பிரளயத்தில், சுழுத்தியிலிருந்து மறுகல்பவாரம்பத்தில் ஜனன மரண சக்கரத்துக்கு வசமாகி மற்ற பந்தஜீவர்களுடன் தானுமொருவனாகத் திரும்புகிறான். அன்பு, ஜீவகாருண்யங்களால் உலகினரின் துன்பங்களைத் தனதென்று நினைந்துருகி அத்துன்பங்களை நீக்குதற்கான கைங்கரியங்களி லீடுபெறலென்ற

உண்மையான முமுக்ஷுத்வம் அவனிடமில்லாததால், அவன் கல்பாந்தத்திலுண்மையான முமுக்ஷுகளுக்கான ஆத்மலோகஞ் செல்லாமற் சுழுத்தியிலிருந்தே மறுகல்பவாரம்ப காலத்தில் இங்கே திரும்புகிறான். இதனால், மோக்ஷத்தைப்பற்றின தவறான அபிப்பிராயமீதென்று முன்னரே நான் சொன்னதும்.

## 5. ஸர்வசமய ஸமரஸ உண்மை.

மோக்ஷத்தைப்பற்றி உலகின் அபிப்பிராயங்கள் எவ்வளவு பேதமுள்ளனவாயினும், மூடரல்லாத ஒவ்வொருவருஞ் சமாதானத்துடன் ஒத்துக்கொள்கின்றதும், இப்பொழுது உலகத்திலுள்ள எல்லா மதங்களுக்கும் பொதுவும் ஆக்ஷேபத்திற்கிடமற்றனவுமான பின்வருஞ் சாசுவத உண்மைகளையுன்னி யுணர்தல் யாவருக்கும் நலந்தரும்.

(1) ஒன்றே கடவுள், நித்தியர், ஸர்வக்ஞர், ஸர்வசக்தரான அவரே பரத்துவம், நாம் பார்க்கும் ஜகத்முழுதும் அவருடைய தூல உடம்பு.

(2) கடவுளின் அம்சம் ஆத்மா. ஆத்மா நித்யர், கிஞ்சித்க்ஞர், அசக்தர், நாம் பார்க்கும் மநிதன் ஆத்மாவின் தூலஉடம்பு. இது பந்தம்.

(3) ஆத்மா கிஞ்சித்க்ஞன், அசக்தன் என்ற சாதாரணபாவனை யொழிந்து அவன் ஒருவித பூர்ண ஞானம் பூர்ண சக்தியுள்ளவனாவான். ஆனவன் பூர்ணன், முக்தன்.

(4) பூர்ணனானவன் பந்தவாத்மாக்கள் எல்லோருடைய துன்பங்களைத் தன்னதாகவே யுணர்விற்பெற்றுத்

துன்ப நிவாரணத்திற்குச் சதா உழைக்கு மியல்பினன். எனவே, எல்லா பூதங்களின் இதத்தை (க்ஷேமத்தை) யுண்டாக்குங் கைங்கரியமே மோக்ஷம்.

"உண்டு பசிதீர்ந்தாற் போலுடம் பெல்லா
அங்கண்டுகொள் காதல்மிகும்."

காதல்—அன்பு—கருணை—பூததயை. (ஔவையார்.)

வைணவ சமயத்தில் ஒரு மகான் தனக்கு வைகுந்தம் வேண்டாம் கைங்கரியத்தி லீடுபாடு வேண்டும் என்று பகவானைப் பிரார்த்தித்தனராம்.

"யொன்றுமாய்ப் பலவுமா யிவையல்லவாய நின்னை யருளாகி நின்றவர்க ளறிவதல்லா லொருவ ரறிவதற் கெளிதாகுமோ." என்றதில், சீவர்களின் துன்பங்களைக் களைதலான கைங்கரியமென்ற ஜீவ காருண்ணியத்தை யுடையவர்களையே "யருளாகி நின்றவர்." என்றுத் தாயுமானவருஞ் சொன்னூர் எனலாம். இவைகளால், மநிதகோடிகளைப் பந்தங்களினின்று விடுதலை யடையச்செய்கிற யாதாமொரு அதிகார ஸ்தானத்தைப் பெற்று, பகவ துத்தேசத்தை மூவுலகிலும் நிரப்ப வேண்டியதற்குத் தாமொரு கால்வாயாய மருதலே மோக்ஷமென்பதன் கருத்தெனத் தெளிந்தோம்.

"உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் உடம்பினி லுத்தமனைக்காண்." என்று ஔவையார் சொன்னபடி மோக்ஷத்திற்கான சாதனங்களைச் செய்தற்கென்றே ஜனன மேற்பட்டிருக்கிறபடியால், அச்சாதனங்களைக் கைப்பற்றலே ம் ஜன்ம சுதந்திரமும், கடமையுமாம். மோக்ஷ சாதனங்களே தான் மோக்ஷமார்க்கமென்பது.

# இரண்டாம் அத்தியாயம்.

## மோக்ஷ சாதனம் என்பதன் அருத்தம்.

### 1. இல்லறமே நல்லறம்.



உலகில் பலவித ஜீவனோபாயங்களான தொழில்களில் அல்லற்பட்டுக் கொண்டிருக்கும் நமக்கு (மற்றெதற்கும் அவகாச மில்லாததால்) மோக்ஷ சாதனங்கட் சாத்தியமில்லையென்றும், மோக்ஷ சாதனங்கள், உலக காரியங்களிற் சம்பந்தியாமல் தனித்திருக்கும் துறவிகளென்றவர்களுக்குத் தான் சாத்தியமென்றும் அனேகர் நினைக்கின்றனர். இது ஒருவாறு சரியே யாயினும், முற்றுந் தவறான அபிப்பிராயம். எவ்வளவு வரையில் சரியானதென்றதை முதலில் பார்ப்போம். சீவன் ஈசுவரனை நோக்கி மேற்சென்று கொண்டிருக்கும் ஸம்ஸார யாத்திரையில், சீவனுக்குப் பல ஜன்மங்களில் விஷய போகங்களின் அனுபவங்க ளேற்படுகின்றன. அவ்வனுபவங்களால் சாசுவதமின்னது, அசாசுவதமின்னதென்ற பிரக்ஞை யுண்டாகிறது. அசாசுவதங்களான விஷயங்களில் பற்றுவிடவும், சாசுவதமான ஆங்மாவினிடம் பற்று வதிக்கவும் ஆரம்பிக்கிறது. இந்நிலையானது யோகம் அல்லது ஞானத்தின் ஆரம்ப நிலை. அதாவது சரியானபடி பக்குவம் முதிராத நிலை. இந்நிலையிலனேகருக்குச்சன சமூகத்திலிருந்து இந்திரிய மனோ நிக்கிர

சங்கடஞ்செய்யு மன உறுதியில்லாம லிருக்கலாம். அதனால் அவர்களுக்குத் தனிமையான தோர் வனத்திற் சென்று, அங்கே இந்திரிய நாட்டங்களுக்கும் மனோ சலனங்களுக்கு மான விஷயங்களில்லாமையால், இந்திரிய மனோ நிக்கிரகங்களை யப்பியாசஞ் செய்தல் முக்கிய மாகலாம். இது கெடுதியல்ல. ஏனெனில், விருப்பு வெறுப்புகளைத் தூண்டும் வஸ்துக்களினிடையில் நிலைபெற முடியா மநமானது, அவ்வஸ்துக்களில்லாவிடத்தில் பழக்கத்தால் சமநிலைபெறச் சாத்தியமாகிறது. அதனால் அவர்கள் மேன்மை யடைகிறார்கள்.

"காடுமலையுங் கருதித் தவஞ்செய்தால்
கூடு முணர்வின் பயன்." (ஔவையார்.)

இத்தகையாரின் மநவுறுதி சரியானபடி யுள்ளதா வென்றும், மநதின் சமாதானம் இந்திரிய விஷயங்களினிடையிற் குலைவுறாமலிருக்கின்றதா வென்றும் பரீக்ஷித்துக்கொள்ளவேண்டி மறுபடியுமவர்கட் சனசமூகத்தினிடையில் வந்து விவகாரங்களிற் சம்பந்திக்கிறார்கள்.

நிற்க, தனித்திருக்கிறவர்களுக்குத்தான் மோக்ஷ சாதனங்கட் சாத்தியமாமெனுங் கொள்கை, எவ்வளவு வரையில் தவறானதென்றதை யிரண்டாவதாய்ப் பார்ப்போம். ஈசுவரன் அன்பு வடிவானதால் சீவன் அவ்வன்பு மயமாதலே மோக்ஷமாம்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே." (திருமூலர்.)

மநதிலுண்டாகின்ற யாதொரு வெறுப்பினுல் (துவேஷத்தினுல்) மனைவி மக்களையும், தனக்கேற்பட்ட தொழில்களையும் விட்டு, பிக்ஷுகனுக வெளிப்படுதலோ அல்லது ஏகாந்தமான தோர் தனியிடத்தை யடைதலோ, மேற்சொன்ன அன்புக்கு எதிர் மறையானபடியால், அது மோக்ஷ சாதனமாகாது; உண்மையான சாதனமும் அதனுல் கைகூடாது. உண்மையான ஞானகுரு அத்தகையனைச் சீடனுயங்கீகரிக்கிறதே யில்லை. அத்தகையன் வேடதாரியே யல்லாமல் துறவி (நிராசைப் பெற்றவன்) அல்ல. அவன் வஞ்சகன், கொடியோன்.

"நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல்
வஞ்சித்து வாழ்வாரின் வன்கணுரில்." (திருக்குறள்)

சாதாரணமாய்க் குறுகினவளவில், ஒரு குடும்பத்திலுள்ள சில பேர்களிடம் அன்பை வளர்க்காதவனு, அளவொன்றல்லாமல் உலகிலுள்ள எல்லா மானிடரிடமுஞ் சமமாயன்பு பாராட்டி உலகினரின் துன்பநிவாரணத்தையே கர்மமாய்ப் பெற்ற துறவறத்திற்கு அருகன்? எக்காலுமில்லை. நிற்க, புலன்களுக்குத் தூண்டுதலைக் கொடுக்குஞ் சந்தர்ப்பங்களில்லாவிடி லப் புலன்கள் தொழிலற்றிருக்கும் (தமோ குணத்திலிருக்கும்). அதனுல் புலன்கள் மநிதனின் வசத்திலடங்கியிருப்பதாய் நினைவுறல் பிசகு. அதனுல் மநிதன் சோம்பற்சாவடியாய் முன்னினுமதிக கீழ்நிலையை யடைந்தவனே யாகிறுன். புலன்களைக் கட்டியாள வேண்டுமானுல், அவைகளைத் தூண்டுஞ் சந்தர்ப்பங்களினிடையில் உலக காரியங்களில் சம்பந்திக்க வேண்டும். அப்பொழுதுதான் புலன்களின் சக்திகள் வெளித்தோன்

றும். அப்படித் தோன்றும்போது விவேகாதி அப்பியாசங்களால் அவைகளை யடக்கியாள இடமுண்டாகும்.

"வாராய் நெஞ்சே யுன்றன் றுன்மார்க்கம் யாவையும் வைத்துக்கட்டிங், காராயடிக்கடி சுற்றுகின்ற யுன்னவலமதிக், கோராயிரம் புத்தி சொன்னாலுமோர்கிலேயோ கெடுவாய், பாராயுன்னைக் கொல்லுவேன் வெல்லுவே னருட்பாங்கு கொண்டே." (தாயுமானவர்.)

தாயுமானவர் துறவியானதால் அவர்பாட்டுத் தனிமை பெற்றவருக்கே பொருந்துவது போற் காணப்படும். இது சரியல்ல. ஏனெனில் தாயுமானவர் துறவி என்பது தனிமை பெற்றதாலன்று. ஆனால் நிராசை பெற்றதால் மட்டுமென்க. நிராசைபெறுதற் கில்லறம் பிரதிகூலமன்று.

"அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது." (திருக்குறள்.)

இல்வாழ்க்கையில் உலக காரியங்களிற் சம்பந்திக்குங் கால் புலன்களையும், விருப்பு வெறுப்புகளையுங் கட்டிக் காக்கும் பழக்க முண்டாக வுண்டாக, அசுத்தமநம் வீரியமற்றுப்போய்ச் சுத்தமநம் வீரியம் பெற்றுச்சீவனுக்கு மேன்மை யுண்டாகிறது.

"அஞ்சுபுலனின் வழியறிந்தாற் பின்னைத்
துஞ்சுவதில்லை யுடம்பு." (ஔவையார்.)

தனக்குக்கடமையா யேற்பட்டுள்ள காரியங்களைத் தொந்திரமென்றெண்ணித் தள்ளிவிட்டுச் சித்திகட் பெறவேண்டுமென்றுங் காயகற்பங்கட் செய்ய வேண்டுமென்றும், அலைகிறவனின் அசாபாசங்கள் கங்கு கரை

பற்றன. முன்னிருந்த விஷயப்பற்றைப் பன்முறை அதிகமாய் வளர்ப்பித்துக் கொண்டவனாயினன்.

“ஆசைக்கோரளவில்லை யகிலமெல்லாங்கட்டி
யாளினுங் கடன்மீதிலே யாணைசெலவே நினைவர்
அளகேச னிகராக வம்பொன்மிக வைத்தபேரு
நேசித்து ரசவாதவித்தைக் கலைந்திடுவர்
நெடுநாளிருந்தபேரு நிலையாகவேயினுங் காய
கற்பந்தேட நெஞ்சுபுண் ணாவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீரவுண்பதும்
உறங்குவதுமாகமுடியும்.
உள்ளதே போதுநா னுநானெனக் குளறியே
யொன்றைவிட்டொன்றுபற்றிப் பாசக்கடற்
குளேவீழாமல் மனதற்றபரிசுத்த நிலையையருள்வாய்.”

(தாயுமானவர்.)

ஆசையால் தனிமைபெற்றவர்களெல்லோரும் துறவிகளல்லர். உலக காரியங்களிற் சம்பந்தித்துத் தொழில் புரிவோரெல்லோரும் துறவாதவருமல்லர். அவரவர்கட்குக் கடமையா யேற்பட்டுள்ள காரியங்களைப் பலனை யுத்தேசியாமற் செய்தலே உண்மையான தவம்; உண்மையான ஸந்நியாஸம்.

“தவஞ்செய்வார் தங்கருமஞ்செய்வார் மற்றல்லா
ரவஞ்செய்வாராசை யுட்பட்டு.” (திருக்குறள்.)

—தங்கருமஞ்செய்வார் தவஞ்செய்தவராவர் என்றும் மேற்சொன்ன வாசகத்திற்கும் பொருளமையும்.

“अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोतियः ।
स संन्यासी च योगी च न निराग्निर्नचाऽक्रियः ॥

—“தனக்குக் கடமையா யேற்பட்டுள்ள காரியத்தை யாவனொருவன், காரியத்தின் பலனைக் கோராமற் செய்கிறானோ, அவனே ஸந்யாஸி; அவனே யோகி.

ஹோமாக்கினியை விட்டவனுமல்ல; சடங்குகளை விட்டவனுமல்ல." (கீதை அத். 6. சுலோ. 1.)

"குலமிலான் குணங்குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமிலான் றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்து
மிலமிலான் மைந்தர் மனைவியில்லான் எவனவன்சஞ்
சலமிலான்" (தாயுமானவர்)

மேற்சொன்ன பாட்டில் "இலமிலான் மைந்தர் மனைவியில்லான்" என்றதற்கு அவைகளை விட்டுத் தனிமைப்பட்டவன் என்றருத்தமில்லை. ஏனெனில் அவ்வாறாயின் "புலமிலான்" என்றதற்கு புலன்கள் ஒன்றுமில்லாத மாமிசப் பிண்டமென்று மூடத்தனமான அருத்தமமையும். புலன்களிருந்தும் அவை வசத்தனாகாதிருக்கிறதைப்போன்று மனைவி, மக்கள், இல்லங்களிருந்தும், அவைகளுக்கு வசப்படாமல் அவைகளினிடையில் மற்ற உலகினர்போல் சம்பந்தித்திருத்தலென்று பொருளமையும். இதுவரையில் பார்த்த மேற்கோள்களால் தனிமைப்பட்டவர்களுக்குத் தான் மோக்ஷசாதனங்கட் சாத்தியமென்ற கொள்கை முற்றிலுந் தவறானதென்றுங்கண்டோம். அதாவது மோக்ஷ சாதனங்களைச் செய்தற்குத் தனியானதோர்நிலை அல்லது இடம் வேண்டுமென்பது சிலருக்குப் பிரதமத்தில் அவசியமாகலாமென்றாலும், மானிடரில் யாவருக்கும் அவ்விதநிலை அல்லது இடம் அவசியமாகாது, நன்றுமாகாது. தனிமைப்பட்டவரும் பின்னர் ஜனசமூகத்திலே சம்பந்தித்துத் தன்னைப் பரீக்ஷித்துக்கொள்ள வேண்டுமாதலால், உலக விவகாரங்களுள்ள ஜனசமூகமே மோக்ஷசாதனங்கட் செய்யத்தகுதியான இடம். ஆகையால், மோக்ஷசாதனங்களைப் பூர்ணமாய்ப்பெற்றவர்களான மேலான ஞானிகள்

தான் ஜனசமூகத்தில் சம்பந்தித்துப் பற்றற்று விவ
கரிக்கலா மென்றதும், ஆரம்பத்தில் மானிடரெல்லோ
ரும் தனியான தோர் திசை அல்லது இடத்திலிருந்து
தான் சாதனஞ்செய்ய வேண்டுமென்றதுஞ் சரியான
கொள்கை என்ற துணிபுக்கிடமில்லை. ஞான பூர்ணர்
கள் ஜனசமூகத்தில் விஷயங்களினிடையில் தவறுத
லன்றிப் பற்றற்று விவகரிக்கிறார்க ளென்பதிற் சந்
தேகமில்லை. சாதனங்களைச் செய்ய வாரம்பிக்கிறவர்
கள் தவறுதல்களுடன் கூடி ஜனசமூகத்தில் விஷயங்
களினிடையிலே யப்பியாசஞ் செய்வதால்தான் அதிக
தீவிரமாயுந் திட்டமாயும் இங்கன்றியும் மேலானபடிகளை
யடைகிறார்கள். எனவே, உலகில் பல தொழில்களில்
அலைப்பட்டுக் கொண்டிருக்கும் நமக்கு மோக்ஷ மார்க்
கம் அல்லது சாதனங்கள் வெகு சமீபமே; தூரமல்ல,
என்று தெளிந்தோம்.

---

## 2. வாலிபமே ஏற்றகாலம்.

உலகிலநேகர் வேறொரு கொள்கையு முடைத்தா
யிருக்கின்றனர். அதாவது, யௌவனப் பருவத்தில்
மோக்ஷசாதனங்கட் சாத்தியமில்லை யென்றும் முக்கிய
மில்லை யென்றும், வயோதிகப் பருவத்தில் தான் அது
சாத்தியமும் முக்கியமுமாகுமென்றுஞ் சொல்வர்.
யௌவனப் பருவத்தில் விஷய சுகங்களை ஆசைதீர
அனுபவித்து வயோதிகங் கிட்டித் தேகந் தளரும்
பொழுதுச் சாதனங்கட் செய்யலா மென்பர். விஷய
சுகங்களை யனுபவிப்பதால் ஆசை தீருமென்று கண்டு
பிடித்த அவர்களின் விவேகந்தான் எவ்வளவு வியக்கத்

நக்கது பாருங்கள்! பூர்வம் யயாதி மகாராஜன் ஆயிர வருஷங்களின் கடையில், விஷய போகங்களால் ஆசை வளருகின்றதே யன்றி ஆறுதலில்லை யென்றும், விவேக, வைராக்கிய சாதனங்களால் தான் ஆசை தீரு மென்றும் சொன்ன வுண்மையை மேற்சொன்ன கொள்கையாளர் பொய்யென ஸ்தாபிக்க வந்தாற்போல் பேசும் அழகே அழகு! அதைத்தப்பிதமென்று நானேன் சொல்லவேண்டும்? தவிரவும் மானிடப்பிறவி யின் முக்கால் பாகமுள்ள வாழ்நாட்களான யௌவனம் முற்றுப்பெற்ற பருவங்களில் மதிகன் தோன்றினவாறு இருந்து, பின்னர் அவனின் வாழ்க்கையில் கடையதான காலபாகத்தில் திடீரெனச் சாதனங்களைச் செய்தல் எந்த நியாயவியற்கையின்படி கூடுமென்பது என சிற்றறிவுக்குத் தோன்றவில்லை. பால்யத்தில் எது பழக்கமாகிறதோ அதுதான் வயோதிகத்திலும் வழக்கத்தைக்கொட்டி வருமேயன்றி, அதுவரையில் பழக்கத்திலில்லாதிருந்தும் வயோதிகத்தில் திடீரென நூதனமாய்ச் சாதிக்கப்பெறலாமென்பது இயற்கையன்று. ஸ்ரீமத் பாகவத புராணத்தில் அஜாமேளா னென்றொருவன் தன் கால முழுதையும் விஷய சுகங்களிற் செலவழித்து யமதூதுவர் வந்தகாலத்தில் "நாராயணா" என்று தன் புதல்வனைக் கூப்பிட்டதால் விஷ்ணு தூதர்கள் வந்து யமதூதுவரை விரட்டி விட்டதாயும் பிறகு காலக்கிரமத்தில் அவன் மோக்ஷமடைந்ததாயு மோர் சரித்திரமுண்டு. இதை அநேகர் ஆதாரமாய்க்கொண்டு மரணங்கிட்டும்போது ஈசுவர நாமத்தைச் சொல்லிவிட்டால் மோக்ஷமடைந்து விடுவோம் என்று சொல்வர். அதாவது, அவர்களுடைய

அபிப்பிராயத்தில், மரணாந்தகாலத்தில் யாதொரு வார்த்தை சொல்லவேண்டியது தான் தாமதம்; உடனே யதற்காக ஏக்கமுற்றிருக்கும் பகவான் மோக்ஷந்தரு வார்; தான் அவ்வித சூழ்ச்சியால் பகவானை யேமாற்றி பாபங்களினின்று மீண்டுவிடலா மென்பதே. மிகவும் அற்புதத்துவங்களுள்ள பாகவத புராணம் உலகினரின் கையில் தெரியாம லகப்பட்டிருப்பதும் பாபிகளின் விதியு மொன்று. பகவான் அவ்வளவு யேமாறுதலுக் குள்ளாகும் சாமானியராயின், அண்டத்தைபாலிப்பது யாரெவ்வாறு? அவராலுலகை பக்ஷபாதமுள்ளதும் நியாயமற்றதுமா யிருக்குமென்று அதுபகவத் தூஷணையாமே. வேதத்திற்கு விரோதமாகுமே. பின்னை அஜாமிளன் விஷயத்தை எவ்வாறு கொள்வது? பாகவதத்தில், அஜாமிளன் பூர்வ ஜன்மங்களிலும் இந்த ஜன்மத்தில் அநேக ஆண்டுகளிலும் தவசியென்றும், பிராரப்த கர்மத்தாலுண்டான நீசஸ்த்ரீ சமேதமான இல்வாழ்க்கை முடிவுபெற்றபொழுது அவனுக்குப் பூர்வஜன்ம வாசனையும் இச்சன்மப் பழக்கமுமான தவத்தின் ஞாபகமுண்டாகவேண்டி, யமவிஷ்ணுபடர்களின் சம்வாதமேற்பட, அவன் வைராக்கியம் பெற்றுப்பின்னநேக வருஷங்கள் தவஞ்செய்து விஷ்ணு பதம் பெற்றானென்றும் ஆழ்ந்த கருத்துக்குச் சரித்திரத்திலேயே விளங்கும். ஆகையால் அஜாமிளன் பழைய தவசியல்லவென்றாவது, விஷயசுகத்தில் எப்பொழுதும் வேண்டுமென்றிருந்தவனென்றாவது, மரணகாலத்தில் "நாராயணா" என்ற சொல்லொன்றினால் மட்டும் மோக்ஷம் பெற்றானென்றாவது கொள்வதற்கில்லை. மரணாந்த காலத்தில் மனம் ஈசுரனை நாடவேண்டுமானால், அதற்கு முன்

ளுள்ள ஆயுள் காலத்தில் சதா மநம் ஈசுவரனை நாடுகின்ற பழக்கத்தாலல்லாமற் சாத்தியமன்று. நரம்புகள் தளர்ந்து இரத்தம் கெட்ட வயோதிக காலத்திற் சாதனங்கட்செய்தல் சாத்தியமன்று. மூளை சரியாய் வேலை செய்யாமல் ஞாபக சக்திகள் மங்கினப்படி யக்காலத்தில் யாதொரு பிரயத்தினமுங் கைகூடாது. மோக்ஷ சாதனங்கட் செய்வதற்கு மூளை செழித்து ஞாபக சக்திகள் தழைத்த, திடதேகமுள்ள யௌவனப் பருவமே தக்ககாலம். அப்பொழுது தான் சரீரம் வசமாகும். வயோதிகத்திற் சரீரம் நம் வசமாதல் முடியாத விஷயம். இதையே " இளமையிற்கல் " என்று முதுமொழி கூறினதென்க.

---

## 3. பிரவிருத்தி நிவிர்த்தி மார்க்கங்கள்.

யோசிக்குங்கால், உலகில் மோக்ஷமார்க்கத்திலில்லாதவ ரொருவருமில்லை. அண்டத்திலே சேதனம் அசேதனமென்ற யாவும் மோக்ஷ மார்க்கத்திலே யுள்ளன என்க. ஆந்மாக்கள் தன்மயமாக வேண்டுமென்றே ஈசுவரன் அண்டத்தை யாக்கினன். அண்டத்தின் ஒரு பாதி பாகத்திலும், பாதிகாலத்திலும் ஆந்மாக்கள் அதோ முகமாகிப் பிரகிருதியிலாழ்ந்து கீழ்நோக்கிக் கொண்டும், மற்றப் பாதி பாகத்திலும், பாதிகாலத்திலும் ஆந்மாக்கள் ஊர்த்துவ முகமாகிப் பிரகிருதியினின்று மீண்டு மேனோக்கிக்கொண்டு மிருக்கின்றன. அண்டத்தின் முற்பாதி நிலையைப் பிரவிருத்தி மார்க்கமென்றும், பிற்பாதி நிலையை நிவிர்த்திமார்க்கமென்றுஞ் சொல்வர். அண்டத்தின் இவ்விரு காலங்களையே பிரம்

மாவின் ஈரரை வயதாய்ச் சொல்வர். ஈசுவரனி னின்றே யாவுமுதித்த தன்கணே யாவும் மறையுமான தால், மோக்ஷமார்க்கத்திலில்லா வஸ்துவில்லை யென்றது. அண்டத்தின் ஒரு பாகமாகிய விப்பூமியிலுள்ள கல், மண், ஓஷதிகள், மிருகங்கள் மானிடரென்ற யாவற்றினிடமும் யாவரிடமும் ஆத்மாவிகசித்துக் கொண்டிருப்பதே மோக்ஷமார்க்க மென்க.

கல்கத்தாவில் டாக்டர் போஸ் என்ற புலனறிவு சாஸ்திரி தாவரங்களிலும் ஓஷதிகளிலு முணர்ச்சி யிருக்கிறதென்று ருசுப்படுத்துகிறா ரென்பதைக் கண்டு கொள்க.

ஆனல் நாமிங்கு மோக்ஷமார்க்க மென்று சொல்ல எடுத்துக்கொண்டதுமனிதரைப்பற்றி மாத்திரமேதான். ஆத்மாகிழ்த்தரகதிகளினின்று மானிடத்தரகதியடைந்த நேரமுதற்கொண்டு, அதுமனிதாதீதநிலையொன்றையடை யும்வரையில் எண்ணரியப் பிறவிகளிற் சம்பந்திக்கின்றது. மானிடத்தரகதியில் முதலில் வித்தாகிப்பின், இலை, பூ, காய், பழமாகி மனிதாதீதத் தரகதியை ஆத்மா பெறும் வரையிலுண்டாகின்ற எண்ணரியப் பிறவி சம் பந்தமான கால அளவை இருபாதிகளாகப் பிரித்து முற்பாதியைப் பிரவிருத்தி மார்க்கமென்றும், பிற் பாதியை நிவிர்த்தி மார்க்கமென்றுஞ் சொல்வதுண்டு. பிரவிருத்தி மார்க்கமாவது, தான் தனதென்ற நாட் டம் மிகுந்து பிறர் நலங் கருதாமற்றன் சுயநல மொன்றையே கருதியும், இன்றேல், தன் சுயநல மும் அதற்காகப் பிறர்நலமுங் கருதியுஞ் செய்யுங் காரியங்களைப் பற்றினது. நிவிர்த்தி மார்க்கமாவது,

தான் தனதென்ற நாட்டஞ் சிறுகச் சிறுகக் குறைந்து சுயநலம் பற்றுமற் பிறர்நலமட்டுமே (ஓம்பல்) கருதிச் செய்யுங் காரியங்களைப் பற்றினது. முன்னது உலகிலிருந்து எவ்வளவு வரையிற்றனக்கு லாபமுங் க்ஷேமமுமுண்டாக்கிக் கொள்வதென்ற ஈயாச்சுபாவம் பற்றியது. பின்னது உலகுக்கு எவ்வளவு வரையில்—அதனால் தனக்கு நஷ்டமும் க்ஷாமமு முண்டாவதாயினுஞ் சரி—நான் லாபமுங் க்ஷேமமு முண்டாக்கும் பாக்கியம் பெறலாமென்ற ஈதற்சுபாவம் பற்றியது. வாழ்க்கையிலிவ்விருவகை நிலையில் மானிடராம் ஆண்பெண்களை வருமுளர். ஈயாச்சுபாவம் பற்றிய பிரவிருத்தி மார்க்கிகளைத் தாழ்த்தி அவர்களை யொருசாரார், இனத்தினர், சாதியாராகவும், ஈயுஞ்சுபாவம்பற்றிய நிவிர்த்தி மார்க்கிகளை யுயர்த்தி அவர்களை மற்றொருசாரார் இனத்தினர், சாதியாராகவும் வேதமானது மானிடவர்க்கத்தை யிரண்டாய்ப் பிரித்தது.

"சாதி யிரண்டொழிய வேறில்லை
சாற்றுங்கா லீதிவழுவா நெறிமுறையின்—மேதினியி
லிட்டார் பெரியோரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கிலுள்ளபடி." (ஔவையார்.)

இதில் மோக்ஷமார்க்க மென்பதை நிவிர்த்தி மார்க்கத்திற்கு மட்டும் பெயர் வழங்க, இங்கு எடுத்துக்கொண்டோம். எந்த மனிதனாயினுஞ் சரி, அவனிடம் பிறர்நலமுள்ள நாட்டமேதாயினுஞ் சுயநலமன்றித் தோன்றி நிஷ்காமமா யுலகுக்கு யாதாமொரு துறையில் க்ஷேமந்தரக்கூடிய காரியத்தைச் செய்வானேல், அவன் நிவிர்த்தி மார்க்கத்தி லடிவைத்தவனே யாகிறான்; அவன்

மோக்ஷமார்க்கத்தில் அடிவைத்தவனே யாகிறான். மோக்ஷ சாதனங்க ளவனுக்குச் சுலபமே. நம்மில் ஒவ்வொருவருந் தன்னை மறந்து தன் குழந்தையினிடமாவது யாதொரு பிரதிபலமுங் கருதாமற் காட்டும் அன்பு, நாம் நிஷ்காம கர்மஞ் செய்கிறவர்களென்பதை விளக்கச் செய்கிறது. சுபாவத்திலே குடும்ப தர்மத்தில் இந்நிஷ்காம கர்மானுஷ்டானமுள்ள நம்மால் மோக்ஷ சாதனங்கட் செய்ய வியலாதென்றால், அதற்கருத்தமேயில்லை. ஆகையால் இச்சன்மத்திற் சாதனங்களைப் பூரணமாகப் பெற முடியாவிடினும், சாதனங்களைச் செய்ய ஒரு முயற்சி யாவதெடுத்தல் நமக்கு இன்றியமையாதது.

---

## 4. சாதாரணர் நிவிர்த்தி மார்க்கம் எய்தும் விதம்.

நம்மில் பெரும்பாலர் விவசாயிகளாயும், வணிகர்களாயும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களாயு மிருக்கிறார்கள். விவசாயிகளானவர்கள் அதிக நிலம் பணம் இவைகளைச் சம்பாதிக்க வேண்டுமென்று பாடு படுகிறார்கள். சம்பாதித்து, சர்க்காரில் கௌரவப் பட்டங்களைப் பெறவும், கௌன்சில்களில் கௌரவத்திற்காக மெம்பர்களாகவும், யத்தனிக்கிறார்கள். கடமைகளையும், உத்திரவாதங்களையும் மறந்தவர்களாகிறார்கள். நமது கடமைகளைச் செய்ய வேண்டுமாயின், எல்லோரிடமும் அன்பை வளர்க்கின்றவர்களாகி, ஊழியஞ் செய்யுங் குடியானவர்கள், வேலையாட்களுக்கு உள்ள உரிமைகளை அங்கிகரித்து, அவர்களை மேன்மையாகவும் பக்ஷ

மாகவும் நடத்தி, அவர்களுக்கு நியாயமாயுள்ள வரு
மானங்களை காலக்கிரமத்தில் கொடுத்து ஆதரித்துவர
வேண்டும். குடும்பத்தில் அவ் வேலையாட்களும் குடி
யானவர்களும் நமக்குக் குழந்தைகள் போன்றவர்க
ளென்று கருதவேண்டும். நமது காரியங்களுக்கு உப
யோகப்படும் கால்நடைகள் இளைய ஜீவர்கள். அவைகள்
நமக்கு உழைத்து வருவதற்காக அவைகளைச் செவ்
வனே போஷித்து வரவேண்டும். அந்தக் கால்நடை
களான ஜீவர்கள் மேல் மார்க்கத்தில் செல்ல வேண்டிய
தற்காக நம்மிடம் ஒப்படைக்கப் பெற்றிருக்கின்றன
வென்றதை மறக்கக்கூடாது. மற்றும் ருஷிகள், தேவர்
கள், பிதுருக்கள், மநிதர்கள் யாவருக்கும் நாம் கட
மைப்பட்டுள்ள யக்ஞங்களைச் செய்தற்கே நாம் விவ
சாயிகளாயிருக்கிறோம் என்றதை ஒருநாளும் மறக்கக்
கூடாது.

நம்மில் வணிகர்களானவர்கள் குறைந்த விலை
களுக்குச் சரக்குகளை வாங்கி அதிக விலைக்கு விற்று,
தனத்தைச் சேகரிக்கப் பேராசை பெற்றவர்களாகி, இக்
காலத்தில் உள்ளதைப் போன்று தேசம் கொந்தளிப்பா
யிருக்கும் சமயம்பார்த்து, தேசபக்தி என்ற பெயரை
வைத்துக்கொண்டு சுதேசிய சரக்குகளை மனம்போனவாறு
அதிகவிலைக்கு விற்று பணம் சம்பாதிக்கிறார்கள். அவ்
விதம் பணம் சம்பாதித்து மேலே சொன்ன பதவிகளை
யும் பட்டங்களையும் மோட்டார்கார்களையும், அடையப் பாடு
படுகிறார்கள். வணிகர்கள் தங்கள் கடமைகளைச் செய்ய
வேண்டுமாயின், தேச நன்மையைக் கருதி வெளியூர்
சரக்குகளை உள்ளூரிலும், உள்ளூர் சரக்குகளை வெளி
யூரிலும் போக்குவரவு செய்து ஜனங்களுக்கு வேண்டிய

படி உபகாரிகளா யிருக்கவேண்டுமென்ற ஒரே உத்தேசத்துடன் தாம் நினைக்கிடுவதற்காகக், குறிப்பிட்ட சொற்ப லாபத்தை வைத்து சரக்குகளை கொள்முதல் விற்றுமுதல் செய்யவேண்டி முன்வரக்கடவர்.

நம்மில் உத்தியோகத்தினரும், வக்கீல்களுமானவர்கள் பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற ஒரே உத்தேசத்துடன் நியாயத்தை அநியாயமென்றும், அநியாயத்தை நியாயமென்றும் வாதஞ்செய்து, தீர்மானங் கொடுத்து, அவர்களுக்குள்ள உயர்ந்தபதவியின் உத்திரவாதத்தையுங் கடமையையும் கவனிக்க எண்ணமில்லாமல், கீழான வழிகளில் பிரவிருத்திக்கிறார்கள். உத்தியோகஸ்தர்கள் தங்கள் கடமைகளை செய்ய வேண்டுமானால், இராஜ்ய நன்மையே முக்கியமான நோக்கமாகி, துரைத்தனமும் குடித்தனமும் செழிக்கும் விதமாக, கடவுளுக்கும், வேந்தனுக்கும் குடிகளுக்கும் தாங்கள் ஊழியர்கள் என்றதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்து, இராஜ நீதிகளைச் சரியானபடி பரிபாலனஞ் செய்யவேண்டும். வக்கீல்களானவர்கள் தங்கட்கடமைகளை செய்யவேண்டுமானால், இராஜ்யத்தில் ஸத்யமும், நியாயமும் செழிக்கவும், அஸத்யமும் அநியாயமும் அழியவும், இராஜ்ய நீதிகளை துரைத்தனத்திற்கும், குடித்தனத்திற்கும் அநுகூலமான வழிகளில் பொருள் அமையும்படி செய்து நியாயவாதமிட வேண்டும். இவ்வாறு நமது கடமைகளையும் உத்திரவாதங்களையும் முதன்மையாகவும், உரிமைகளை இரண்டாவதாகவும் கருதி கருமங்களைச் செய்வோமானால் நாம் மோக்ஷசாதனங்களைச் செய்கிறவர்களே, எனச் சொல்லற்பாலது. எவ்வளவுக்கு நம்மிடம் பிறர் நலசம்பந்தமான எண்ணங்

களும் காரியங்களும் இருக்கின்றனவோ, அவ்வளவுக்கு நாம் கடவுளின் அநுக்கிரகத்திற்குப் பாத்திரமாகிறோம், அவன் சமீபஞ் செல்கிறோம். சுயநல நாட்டமுள்ள ஒரு பெரிய வைதிகனென்ற ஆஸ்திக புத்தியுள்ள மனிதனைவிட, பிறர்நல நாட்டமுள்ள சாதாரண உலக விவகாரி என்ற நாஸ்திகபுத்தியுள்ள மனிதனை கடவுளுக்கு அதிக நெருங்கின சம்பந்தமுள்ளவனாகிறான். பின் சொன்ன மனிதனை மோக்ஷ சாதனத்தைச் செய்கிறவனென சொல்லப்பாலது. பிறர்நலம் ஓம்பலே மோக்ஷ சாதனம். பிறர்நல நாட்டத்துடன் ஆஸ்திக புத்தியுமிருந்தால் நலமுநன்றே. ஆஸ்திக புத்திமட்டும் இருந்து பிறர் நலமோம்புஞ் சுபாவம் இன்றேல் அது மோக்ஷசாதனமாகாது. இதைப்பற்றி அதிக விரிவாய் இவ்வுபந்நியாசத்தின் முடிவுரையில் சொல்ல எண்ணினமையால் மேற்கண்ட விபரமே இங்குப் போதுமானது.



## மூன்றாவது அத்தியாயம்.

### மோக்ஷ மார்க்கம்.

### 1. இயமம் நியமம்.



இந்த மோக்ஷசாதன மெனும் மோக்ஷ மார்க்கத்திற்கு யோகமார்க்க மென்றும் பெயருண்டு. இம்மார்க்கம் தொன்று தொட்டு உலகந் தோன்றின நாள் முதல் இருந்து வருகின்றது. எக்காலத்திலும் இருக்கப்போகின்றது; கீதை ஒன்பதாவது அத்தியாயத்தில் 18 - வது சுலோகத்தில் गति (கதி) என்றும் இது சொல்லப்பெறுகிறது. மோக்ஷம் என்பதற்கு, லயம், என்றும் ஒரு பொருளுண்டு. "லயம்" என்றால் "யோகம்" என்றும் பொருளமையும். யோகம் என்றால் இரண்டு அல்லது மேற்பட்ட வஸ்துக்களின் கலப்பு அல்லது சேர்க்கை எனலாம். உப்பு, புளி, காரம் சேர்ந்தநிலையும் அவ் வஸ்துக்களின் யோகநிலையே. ஆகாசத்தில் நக்ஷத்திரங்கள் சோதிட சாத்திரத்தின்படி ஒன்று சேருதல் யோக மெனப்பெறும். அத்தியாத்மிகமாகப் பார்க்குங்கால், பதஞ்சலியோக சூத்திரத்தின்படி, சங்கற்ப விகற்பங்களாகப் பகிர்முகப்படும் மநதை அந்தர்முகப் படுத்தல், அதாவது சித்தவிருத்தி நிரோதனமே யோகம் எனப்பெறும்.

"துள்ளுமறியா மனது பலிகொடுத்தேன் கர்ம
துஷ்ட தேவதைகளில்லை........"

என்றார் தாயுமானவரும்.

இந்தக் கடைசியான அருத்தமே இங்கு நமக்கு உபயோகமானது. சித்தவிருத்தி நிரோதனமென்ற வாசகம் சிறியதேயாயினும் அதன் கண் புதைந்து கிடக்கும் அருத்தம், அநுபவரூபமாக ஆழ்ந்து நோக்குங்கால், மேன்மேலும் உன்னத நிலைகளை யுணர்த்தும் ஒன்றாயுளது. இம்மார்க்கத்திற்கு இயமநியமாதி, அல்லது அஷ்டாங்க மார்க்கமென்றும் பெயருண்டு. இது நம்போன்றவர்களால் இப்பொழுதே எளிதில் அவலம்பிக்கப் பெறத்தக்கது; ஆனால், அநுபவம் முதிர, முதிர "நேதி, நேதி" என்ற உபநிடதத்தின்படி உயர்ந்த சமாதி யோகத்திற்கும் எட்டாத அவ்வளவு கடின விஷயமாகவும் உள்ளது. இதையே,

"அதுவென்றன்னு மதுவு மற நின்ற
முதியஞானிகண் மோனப் பொருளது........"

என்றார் தாயுமானவர்.

இம்மார்க்கம் செங்குத்தானது, கரடு, முரடானது, கத்திமுனை போன்றது. இதன் அடிவாரம் இவ்வுலகில் நாம் யாவரும் கிட்டி அடிவைக்கத் தக்கதாயும், இதன் சிகரம் பிரஹ்ம நிர்வாணம்வரை அளாவி நிற்பதாயுமுள்ளது. மேலே இதை இயமநியமாதி மார்க்கமென்றேன். மநம், வாக்கு, காயம், என்ற மூன்று கரணங்களாலும் உலக நலந்தருங் காரியங்களிலே உழைத்தவரின், திரிகரண தண்டம் செய்வதாகின்றது; அதுவே இயமம். ஆசாரிய, பகவத் பக்தி, பூத

தயை என்ற குணங்களை இடைவிடாது அப்பியசித்தலே திரிகரண சுத்தி; இதுவே நியமம் எனலாம். நம் கண் இருக்கும் குற்றங்களைக் களைதல் இயமம் என்றும், குணங்களைப் பயிற்சி செய்தல் நியமம் என்றும் அஷ்டாங்க யோகத்தின்படி பொருள் கூறலாம். இயமம் அல்லது திரிகரணதண்ட மென்றால், கருவி கரணங்களை ஹடப்பிரயத்தினங்களால் அவைகளின் தொழிலற்றிருக்கச் செய்தலன்று. மநிதகோடியின் துக்கங்களைக்கண்டு அவைகளைக்குறைக்கும் வண்ணம் எவ்வித சுயலாப உத்தேசமுமின்றி பகவானின் ஒரு கருவியாக மட்டுந்தானிருப்பதாகக் கருதி உலக கைங்கரியஞ் செய்தலே திரிகரணதண்டம். அதாவது இயம அப்பியாசம் என்க. திரிகாரணசுத்தி அல்லது நியமம் என்பது, மேற்சொன்ன கைங்கரியத்தில் சுயநல நாட்டமற்று ஆசாரிய ஈசுவர திருவுள்ளமலர்ச்சி ஒன்றையே லக்ஷியமாக எண்ணி அவர்களிடம் பக்தியும், உலகிலுள்ள துக்கங்களுக்காக மந இளக்கமும் உடைத்தாயிருப்பதே என்க. சுயநல நாட்டம் ஒன்றுமே அல்லாமல் பிறர்நல மட்டுமே நாட்டமாயுள்ள காரியங்கள் எவையாயினும் அவை யாவும் ஈசுவர கைங்கரியமே, சந்தேகமில்லை. சுயநல நாட்டமற்ற பிறர்நல சம்பந்தமான காரியங்களில் உள்ள சிரத்தையும் விசுவாசமும் பக்தி, உண்மையான பக்தி எனப்பெறும்.

தன் மோக்ஷத்தையோ, சுயலாபத்தையோ கோரி பக்தி செய்தலும், கோவிற் பணிவிடை செய்தலும், க்ஷேத்திரவாசஞ்செய்தலும், தீர்த்தயாத்திரை செய்தலும் மநிதர் பெரும்பாலரின் சுபாவம். அச்காரியங்களால் அவர்களுக்கு எவ்வளவோ பிரயோசனமுண்டு.

அவைகள் சத்கர்மங்களே. ஆனால் அவைகளால் மோக்ஷ மார்க்கத்தில் செல்வதற்கு, நேரான பிரயோசனமில்லை. ஆத்மா ஸர்வபூதங்களிடத்தும் எகமாய், ஸமமாயிருக்கின்றதென்ற பிரக்ஞையுள்ளவனெவனாயினுஞ் சுயலாபத்தைக் கருதுவானா? ஒருநாளுமில்லை. ஆகையால் அறிவாளியானவன் பக்தி கைங்கரியங்களைச் சுயலாப புத்தியற்ற ஞானத்துடன் அவலம்பிப்பான் என்பதையும், அவ்வாறு அவலம்பிப்பதன் காரணமாக மட்டுமே ஸத்குரு கடாக்ஷமுண்டாகுமென்பதையும் உணர்த்தியே கீதை நான்காவது அத்யாயத்தில் 34-வது சுலோகத்தில், பக்தியை, ப்ரணிபாதேன = குருபக்தி என்றும், கைங்கரியத்தை, ஸேவயா = குருவுக்கு தொண்டுபுரிதல் என்றும், இவை விவேகத்தைப்பற்றி இருக்க வேண்டுமென்றதை, பரிப்ரச்னேன = விசாரணையால் என்றுங் கூறினபின்னர்; உபதேக்ஷ்யந்திதே க்ஞானம் க்ஞானின: தத்வதர்சின: = தத்வதரிசிகளான ஞான குருக்கள் ஞானோபதேசம் செய்வார்கள் என்றுங் கூறினாரென சொல்லத்தகும். இவ்வாறு ஞானத்தால் தழுவப்பெற்ற பக்தியாலும் கைங்கரியத்தாலும் அவலம்பிக்கப் பெறவேண்டிய யோகமார்க்கமானது முப்பான்மையதாயுள்ளது.

---

## 2. மார்க்கம் முப்பான்மையதானதேன்?

மார்க்கம் முப்பான்மையதா யிருப்பதன் காரணம் சீவர்கள் முப்பான்மையரா யிருப்பதே என்க. முப்பான்மையதான மார்க்கத்தை மூன்று பெயர்களுடன் வெவ்வேறாக கூறுமிடத்து, அது ஞானயோகம்,

பக்தியோகம், கர்மயோகம் எனப்பெறும். ஆத்மா ஈசுவர அம்சம். ஈசுவரன் ஸச்சித் ஆனந்தன் என்றதால் ஆத்மா வும் அக்குணமுடையது யிருக்கவேண்டும். ஆத்மா ஆதலால் கிரியா ஞான இச்சா மயமானவன். இது அப்ராகிருதமில்லை. ஈசுவராம்சத்திற்கு பஞ்சபூதப் பிரகிருதி சம்பந்த முண்டாகுங்கால், ஆகாச தத்வத்திற்கு இச்சா சத்தியும், வாயுதத்துவத்திற்கு ஞான சத்தியும், அக்னி தத்துவத்திற்கு கிரியாசத்தியும் முறையே உயிர்பாகங் களாகி, தத்துவங்களில் இயக்கஞ்செய்து, மீண்டும் முறையே ஆத்மபுத்தி, மனஸ் தத்துவங்களாய் முப் பான்மையதான ஜீவசொரூபமாய் அமைந்தன. இச்சா, ஞான, கிரியாசத்திகள், ஒன்று மற்றிரண்டையும் அதிக் கிரமிக்கும் அதிக்கிரமித்த ஒன்றுக்கு மற்றிரண்டும் உள்ளடங்கியு மிருக்கின்றன. ஆகலால் ஆத்மபுத்தி மனதத்துவங்களும் அவ்வாறே ஒன்று மற்றிரண்டை யும் அதிக்கிரமிக்கும், அதிக்கிரமித்த ஒன்றுக்கு மற்றி ரண்டும் உள்ளடங்கியு மிருக்கின்றன. இஃது இயற்கையி னமைப்பாயுள்ள தத்துவப் பிரிவினை. இவ்விதமான ஜீவாத்மா, சுவர், புவர், பூர் என்ற மூவுலகு சம்பந்தம் பெறுங்கால், மனஸ் தத்துவம் சங்கற்ப விகற்பமாம் அகத்த மநதாகவும், புத்தி தத்துவம் இச்சை முதலிய காமினைகளாகவும், ஆத்ம தத்துவம் தூல உருவமாக வும் பிரதிபிம்பிக்கின்றன. மானிடர் தூல உருவத்தால் தொழில் செய்தலும், காமினையால் இச்சை இச் சிப்பதும், அகத்த மநதால் விஷயங்களை அறிவதும் சகசமா யிருக்கின்றதென அறிவோம். தொழில் புரி வோனை கர்மி என்றும், இச்சைகளின் வசப்பட்டவனை காமி என்றும், தன்னறிவு ஆராய்ச்சி யுடையோனை

அறிஞன் என்றும் நாம் சொல்வது வழக்கம். இது சாதாரண பிரவிருத்தி மார்க்க சம்பந்தமுள்ள மனிதனைப் பற்றின பேச்சு. அதே மனிதன் ஜன்மாந்திர ஸம்ஸ்கார பரிபக்குவத்தால் நிவிர்த்தி மார்க்கத்தில் திரும்புங்காலையில், பிரவிருத்தி மார்க்கத்தில் சுயநலநாட்டம்பற்றி கருமங்கள் செய்துவந்த கர்மியாயின், நிவிர்த்தி மார்க்கத்தில் பிறர்நல நாட்டம்பற்றி, கைங்கரிய ரூபமான காரியங்களைக் கடமைகளாகச் செய்யும் கர்மயோகியாகிறான். பிரவிருத்தி மார்க்கத்தில் காமியங்களில் இச்சைபெற்ற காமியானவன், நிவிர்த்தி மார்க்கத்தில் விஷய இச்சை யற்றவனாகி, உலக கைங்கரிய மயமான, பரம்பொருளிடம் ஆசை பிறந்த, பக்தியோகியாகிறான். பிரவிருத்தி மார்க்கத்தில் விஷயஞான ஆராய்ச்சியுள்ளவன், நிவிர்த்தி மார்க்கத்தில் விஷயாதீத ஞான ஆராய்ச்சி யுடைய ஞானயோகியாகிறான். ஆகையால், உலகினில் யார் யாரிடம் இச்சாசக்தியும் அதனால் ஆத்மதத்துவமும் பிரபலமாகி மற்றிரண்டு தத்துவங்களும் உள்ளடங்கி யிருக்கின்றனவோ, அவரவரெல்லாம் கர்மயோக மார்க்கத்திற்கும், யார் யாரிடம் ஞானசக்தியும், அதனால் புத்திதத்துவமும் பிரபலமாகி மற்றிரண்டு தத்துவங்களும் உள்ளடங்கி யிருக்கின்றனவோ, அவரவரெல்லாம் பக்தியோக மார்க்கத்திற்கும், யார் யாரிடம் கிரியாசக்தியும் அதனால் மநத்தத்துவமும் பிரபலமாகி, மற்றிரண்டும் உள்ளடங்கி யிருக்கின்றனவோ, அவரவரெல்லாம் ஞானயோக மார்க்கத்திற்குஞ் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். இவ்வாறு ஜீவர்களின் முப்பான்மையதான பேதமே மார்க்கம் முப்பான்மையதா யிருப்பதற்குக் காரணம் என்று பார்த்தோம். இந்த யோகமார்க்கம்

அல்லது மோக்ஷமார்க்கத்தில் செல்கிறவர்கள் ஞான குருக்களின் உதவியை நாடி, பின் அக்குருக்களின் ஆதரவின்கீழ் செல்கிறவர்களென்றும், ஞான குருக்களின் உதவியை அபேக்ஷியாமல் தமக்குத்தாமே ஆத்ம பலத்தை முக்கியமாகக்கொண்டு சுயப் பிரயாசைகளால் ஈசுவரன் ஒருவனை மட்டுமே லக்ஷியமாகக்கொண்டு, சாதகாசாரிகள் ஒருவருடைய உதவியையும் கோராமல் மேல் செல்கிறவர்களென்றும், இருவிதத்தினராவர். மநிதகோடியில் பெரும்பாலருக்கு, குருக்களின் உதவியின் கீழ் செல்கிறவழியே சுகமாயிருக்கிறதெனலாம். அதுவே அதிக சுலபமானது என்று காண்கிறது.

---

## 3. சாதன சதுஷ்டயம்.

ஞான ஸத்குருவின் ஆதரவின்கீழ் மோக்ஷமார்க்கத்தில் செல்கிறவர்கள் முதலில் உண்மையான ஞான குருவால் பரிசோதிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெறுகிறார்கள் இது எக்காலத்திலும் வழக்கமென்பது இதிஹாஸ புராணங்களின்படியும் இக்காலத்து நடவடிக்கையின்படியும் உண்மையாகிறது. அவ்விதம் அங்கீகரித்த பின்னர், குருசிடனுக்கு ஞானதீக்ஷை கொடுப்பது எந்நாளிலும் வழக்கம். ஞானகுருவால் பரீக்ஷார்த்தமாய் வைக்கப்பெற தம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டியவர்களும், அவ்விதம் பரீக்ஷார்த்தமாய் வைக்கப்பெற்ற நிலையிலுள்ளவர்களும் ஞானதீக்ஷைக்குத் தயாராகு முன்னர் அப்பியசிக்க வேண்டிய சாதனங்கள் நான்குள. ஞானதீக்ஷைக்குத் தயாராக வேண்டியவர்களுக்கு இச்சதுர்வித சாதனங்களை விட்டால்

வேறு வழியுமில்லை. சாதன சதுஷ்டயம் என்று சாதனங்களுக்குப் பெயருண்டு. அவையாவன: "விவேகம்", "வைராக்யம்", "ஷட்ஸம்பத்தி," "மோக்ஷாபேக்ஷை," என்பனவாம். கீதையில் நான்காவது அத்யாயம் 34-வது சுலோகத்தில், "பரிப்ரச்னேன," என்ற பதமானது இந்த சாதன சதுஷ்டயத்தையே குறிப்பிடுவதாக சொல்லலாம். சாதன சதுஷ்டயத்தைப் பூரணமாய்ப் பெற்றிருக்க வேண்டுமென்பது நமது நிலையிற் சாத்தியமன்று. ஜீவன் முக்தருக்கு மட்டுமே இந்நான்கையும் பூரணமாய் உடைத்தாயிருக்க சாத்தியம். மற்றெவருக்கும் பரிபூரணமாய் அவைகளைப்பெற்றிருக்க சாத்தியமன்று. என்றாலும் சாதன சதுஷ்டயத்தை தவறின்றிப்பழகுவதற்கு விடாமுயற்சி ஒன்றுமட்டுமே நம்மிடம் எதிர்பார்க்கப் பெறுகின்றது. குற்றங்களைக் களைந்து, குணங்களைக் கொண்டு, மேனோக்கிச்செல்ல முயற்சியும் சிரத்தையும் பெற்று, ஒரோர் தவறுதல் மத்தியிலும் அதை வென்று மேற்செல்லத்தக்கப் பிரயத்தனம் மட்டுமே நம்மிடம் எதிர்பார்க்கப் பெறுகின்றது. ஞானகுருவை அடைவதற்கான சாதன சதுஷ்டய அப்பியாசத்தில் கபடமேதுமன்றி ஊக்கமது கைவிடாமல் பாடுபட்டால், நலமிகவுண்டு. ஞானகுருவானவர் நமது வெளிக்காரியங்களைப் பார்க்கிறாரில்லை. நம் இதயத்தைத் தான் பார்க்கிறார். இதயம் கடினமன்றி உருக்கமுள்ளதாயின், பாவத்தையும் தழுவுகின்ற சுபாவமுள்ளதாகி, விரிந்து, பிரகாசமுள்ளதாயின், அதைக் கண்டு ஞானகுருவானவர் அநுக்கிரகிக்கிறார். நமது நாட்டங்கள் உயர்வற உயர் நிலை பற்றினவையாயும், மாசற்றனவாயும், பிறர் நலம் பற்

றினவையாயிருப்பின், நாம் குருவின் அநுஙகிரகத்துப் பாத்திரமாவோம்.

முதலாவது சாதனமாகிற "விவேகம்," என்பது, "ஆத்ம அநாத்ம விவேகம்," "நித்யா நித்யவிவேகம்," என்று வழங்கும். உலக விவகாரத்தில் இன்னது சாசுவதம், இன்னது அசாசுவதமென்று விசாரணையால் கண்டு கொள்ளல் விவேகம்; ஆத்மா இன்னது, அநாத்மா இன்னதென்று கண்டு கொள்ளல் விவேகம்- ஆத்மா ஏகம்; அநாத்மா அனேகம். உலக விவகாரத்தில் நாம் இந்த விஷயத்தைக் காணவேண்டும். ஐகமத்யம் சாசுவதமானது பற்றி அதை பிரதி தின வாழ்க்கையில் பழகவேண்டும். நமது தேசத்தில் ஆரியர் முதலாவது வகுப்பினராம் ஸநாதன மதத்தினர் அனேக உள்வகுப்பினரும், கிருஸ்துவர்கள், பார்ஸிகள், ஜெயினர், சிக்மதத்தினர், பவுத்தர், மகம்மதியர் என்ற அனேக மதத்தினருஞ் சேர்ந்திருக்கிறார்கள். மேற் கண்ட நாநாவித மதத்தினரும் ஒருவருக்கொருவர் நேயம் பாராட்டி, அன்பின் வழிபற்றி நடக்கக் கடவோம். சாதி, மதத்துவேஷங்களைப் பாராட்டக் கூடாது. எல்லா மதங்களும் மோக்ஷ மார்க்கங்கள் என்பது உண்மை. பரம்பொருள் ஒன்றே என்று இத்தனை மதங்களும் பறையறைகின்றன. இம்மதங்களின் ஸம்ஸ்காரங்களும், கோட்பாடுகளும் ஒரேவித உத்தேசம் பற்றினவையே.

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்கும் பரம்பொருளே நின்விளையாட்டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின்மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற்றம்மா. (தாயுமானவர்)

ये यथा मां प्रपद्यंते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तंते मनुष्याः पार्थ सर्वशः ॥

"எப்படி எப்படி மனிதர் என்னைக் கிட்டிடினும், அப்படி அப்படி அவர்களை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஏனெனில், பார்த்த! ஒவ்வொரு பக்கத்திலின்றும் மனிதர் நாடும் மார்க்கமானது என்னுடைய மார்க்கமே."

கீதை நான்காவது அத்யாயம் 11-வது சுலோகம்.

அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவரி றையவ ரெனவடி யடைவர்கள்
அவரவரி றையவர் குறைவில ரிறையவர்
அவரவர் விதிவழி யடைய நின்றனரே. (திருவாய்மொழி)

ஆகையால் அறிஞர் மதத்துவேஷம் பாராட்டார். இதர மதங்களிடத்து அன்பும் மரியாதையுமே பாராட்டுவார். நித்தியா நித்திய விவேகத்தை அப்பியசிக்க வேண்டுமானால், அநித்தியங்களான வெளி வித்தியாசங்களைக் கண்டும், மதங்களின் வெளி அநுஷ்டான பேதங்களைக் கண்டும் மருளுக்கு வசமாகக் கூடாது. நித்தியமான உபதேச சாரத்தைப்பற்றி, மதங்களின் ஐகமத்யத்தை யுணர்ந்து தெளியவேண்டும். மனிதன் எம்மதத்தினனாயினுஞ் சரி, எவ்வர்ணத்தினனாயினுஞ் சரி, எவ்வாசிரமத்தினனாயினுஞ் சரி, அவன் பகவத்சித்தானுசாரமா யொழுகுகின்றானா வென்பது முக்கியமே யொழிய, பிறிதெதுவும் முக்கியமல்ல. எல்லா ஜீவர்களிடமும் அன்பை வளர்த்துக் கொண்டு ஒழுகுகின்றவனே உத்தமன். குறிப்பிட்ட ஒரு சாதியான், மதத்தினன் என்றதற்காக அவன் உத்தமனாகான். பிறர் காரி

யங்களைப் பற்றி புறங்கூறாமை முக்கியம். பிறர் காரியங்களைப்பற்றி நாம் கொண்டிருக்கும் அபிப்பிராயம் தவறாயிருக்கக் கூடும். அவர்களின் உத்தேசங்களின்னவை என்று நாமும் அறியோம். நீதி அநீதி இன்னதென்று ஆராய்ந்து நீதியையே பற்றல் விவேகமாகின்றது. "இது நீதி" என்ற இடத்தும், இரண்டு காரியங்கள் முக்கியங்களாகத் தோன்றும்பொழுது, அவைகளில் எது ஸத்குருவின் திருவுள்ளத்திற்கு உகப்பாயிருக்குமென்றதைக் கண்டு அதைப் பற்றலே விவேகம். முக்கிய மற்ற காரியங்களில், நீதிக்கு விரோதமன்றி, பிறர் அபிப்பிராயங்களுக்கு இணங்கி நடத்தல் நன்றெனத்தகும்.

பிறகு, "விராகம்" அல்லது நிராசை என்பது இரண்டாவது சாதனம். விவேகம் ஒருவாறு கைகூடின், அதைப்பற்றி விராகமும் உதிக்கும். சாசுவதம் இன்னதென்ற தெளிவுண்டானால், அசாசுவதங்களிடத்து ஆசை அறுகின்றது. ஆசை என்பது விருப்பும், வெறுப்பும்; விருப்பும் வெறுப்பும் ஒன்று மற்றதன் சாயலாகின்றது. நிராசை என்பது விருப்பும் வெறுப்பும் அற்றநிலை. விஷயங்களில் சம்பந்திக்குங் காலையில், விருப்பு வெறுப்புகளுக்கு வசமாகாமல் இருக்க வேண்டும்.

வேண்டாம் விருப்பும்வெறுப்பும்
அந்தவில்லங்கத்தாலே விளையுஞ்சனனம் (தாயுமானவர்.)

விருப்பு வெறுப்புகளற்ற ஒருவித வாழ்க்கையும் உளதோ என்றும் சாத்தியமோ என்றும் அநேகருக்குச் சந்தேகம் ஜனிக்கக்கூடும். சற்றுயோசிக்காத குறையால்

இச்சந்தேகம் உதிக்கக்கூடியதே யன்றி வேறல்ல. மனைவி மக்கள் சுகமாயிருக்கவேண்டுமென்று அவர்களிடமிருந்து யாதொரு கைம்மாறையும் எதிர்பாராமல், அவர்களிடம் உள்ள அன்பின் மிகுதியால் அவர்களுக்காக நாம் பாடுபடுகிறோம். இது நமக்குச் சகஜமாயிருக்கும் விஷயம். சுகம்வரினும், துக்கம்வரினும், லாபம்வரினும், நஷ்டம்வரினும் அவைகளை எதிர்பாராமல் மனைவிமக்கள் சுகம்பெற்றால் போதுமென்ற ஒரேவித கருத்துடன், நாம் தேகத்துக்கும் மனத்துக்கும் உண்டாகக்கூடிய கஷ்டங்களையுஞ் சகித்துக்கொண்டு பாடுபடுவது பெரும்பாலருக்குச் சகஜம். இது சுயநல பாவனையற்றதால் நிஷ்காம கர்மம் எனப்பெறும். இந்த பாவனையை எல்லா மானிடர்களும் பரவச்செய்து பொதுநலம் ஒன்றின் மட்டும் அவாபிறந்தவராகி சுயநலநாட்டங்கொள்ளுதலின்றி, காரியங்களில் பிரவிருத்தித்தால், அதுதான் விருப்புவெறுப்புக ளற்ற வாழ்க்கை. சுயநலமானவைகளெல்லாம் விருப்பு வெறுப்புகட் சம்பந்தமான ஆசைக்குட்பட்டது. பொதுநலமானவைகளெல்லாம் விருப்பு வெறுப்பு என்ற பாவனையொழிந்த நிராசையின் லக்ஷணமானது. சுயநலம் பற்றிய கிரியாவும் ஜனனங்கள் விளையக் காரணங்களாகும். பிறர்நலம் அதாவது பொதுநன்மை பற்றியகிரியாவும் மோக்ஷப்பேற்றுக்குப் படிகளாகும். பிரதிதின வாழ்க்கையில் ஒன்று வேண்டுமென்ற விருப்பன்றியும், ஒன்று வேண்டாமென்ற வெறுப்பன்றியும், கடமைகளாம் காரியங்களைக் காரியங்களுக்காக மட்டும் சுக, துக்க, லாப, நஷ்டங்களென்ற நாட்டமன்றி நாம் செய்யக்கடவோம்.

நிராசை அல்லது இஹாமுத்ரார்த்த பல போகவிராகம் என்ற இந்த இரண்டாவது சாதனத்தை அப்பியசிக்குங்காலையில், நமக்குத் தெரியாமலே சில சூக்ஷ்மமான இச்சைகள் நம்மிடம் குடிகொள்ளக்கூடும். நாம் செய்யும் பொது நன்மையான காரியங்களைப் பிறர்கண்டு மெச்ச வேண்டு மென்றும், அதற்காக நம்மிடம் நன்றிபாராட்ட வேண்டுமென்றும், நம்மை நன்கு மதிக்கவேண்டுமென்றும், நமக்கு உள்ளுக்குள்ளே விருப்பமிருக்கும். யோக சித்திகள் பெறவேண்டுமென்ற விருப்பமுண்டாகும். அல்லது, நம்மை மேலான உபந்நியாசகர் என்று யாவரும் மெச்சவேண்டுமென்ற விருப்பம் பிறக்கும். இவ்விச்சைகளைக் கண்டு வேர் களைய வேண்டும். அவை பிறக்கும்பொழுதெல்லாம், ஈசுவரனின் தர்மசட்டத்தை கொண்டு செலுத்தவேண்டியே அவரின் கைங்கரியத்தில் அமர்ந்துள்ள நாம் அவரின் கருவியே யன்றி, நமக்குப் பிரத்தியேகச் சொந்தமாய் யாதொரு லாபநஷ்ட சுகதுக்க பலன்களுக்கான சுதந்திரத்தை நாம் பெற்றிலோம் என்ற தீர்மானமுள்ள எண்ணத்தை வகிக்க வேண்டும்.

பிறகு, மூன்றுவது சாதனம் ஷட்சம்பத்தி என்பது. ஸமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, ஸமாதானம் என்ற அறுவித மநநிலை. "சம மகக்கரண தண்டம்," என்றபடி இது மநவடக்கம். மநம் சங்கற்ப விகற்ப ரூபமாயிருக்கிறது. சங்கற்ப விகற்பங்கள் உலகின் க்ஷேமத்திற்கும் க்ஷாமத்திற்குங் காரணமாஞ் சக்திகளாகின்றன வென்று குப்தவித்தை பிரேரேபிக்கின்றது. ஆனதால், சங்கற்பங்களை உலக நன்மைக்காதாரமாக விளைவித்தலும், உலக நன்மைக்கு விரோத

மான சங்கற்பங்களை அவைகளுக் கெதிர்மறையான சங்கற்பங்களைக்கொண்டு திருத்தமுறச் செய்தலும் "சமம்" என்று வழங்குகின்றது. மனதின் இப்பழக்கத்தால் அது ஒருமுகப்பட்டு, வலிமைபெற்று, தீங்கற்றதாயிருக்கும்; நல்வழிக்கான சக்தியாயமரும்; நமக்கு அடிமையாயுமிருக்கும். தோழர் கைநழுகவிடு நாளிலும், ஐசுவரியம் குன்றி எழ்மைத்தன முண்டாகுங்காலத்திலும், பிறர் நிந்தனை அல்லது ஸ்துதிசெய்யும்பொழுதும் மனஞ்சலியாதிருக்கும் வண்ணங் கட்டிக்காத்துக்கொள்ளலே "சமம்" எனப்பெறும்.

"தமம் புறக்கரண தண்டம்" என்றபடி அது பகிரிந்திரிய வடக்கம். நாம் செய்யுங்காரியங்கள் அன்பின் வழிபற்றி யிருத்தலே தமம். சமம் அப்பியசிக்கப் பெறுமளவிற்கு, தமம் என்பது முன்னதையொட்டி பழக்கத்திற்கு வருகிறது. பகிரிந்திரியங்கள் மனதை ஆசிரயித்திருத்தலால், மனம் வசப்படும் அளவிற்கு, அவை நம்வசமாகின்றன. பிறர் நலமோம்பும் காரியங்களில் எப்பொழுதும் ஈடுபட்டிருத்தலால், தமம் நம்மிடம் அமைவுறும்.

"உபரதி," என்றால் எல்லோரிடமும் பொறுமை பாராட்டுதலாம். இதை "விடல்" என்றும் சொல்வர். "அமர்தரு கருமம் பற்றறுத்தலே விடலென்று ரும்," என்றார் கைவல்யத்தார். யாவர்களும் யாவற்றின்கணும் வெளித்தோற்றத்தைக் கண்டு யாதொரு அபிப்பிராயம் கொள்ளாமல், அந்தராத்ம ஐக்ய நிலையையுன்னி பொறுமை பாராட்டலே உபரதியாகும். வேறுபடுஞ் சமய[illegible]ரிடத்தும், பாரம்பரா வழக்கங்களிடத்

தும் அவைகளின் வெளி வித்தியாசங்களைப்பற்றி வேற்றுமை பாராட்டி துவேஷங்கொள்ளாமல், அவை கண் புதைந்துள்ள ஐகமத்யமான உட்கருத்தைப்பற்றி சமரசம் பாராட்டிப் பொறுமை கொள்ளவேண்டும். அவ்வாறே மநிதர் கண்ணும் தோஷங்களைக் கண்டு குற்றம் பாராட்டாமல், குணங்களை மட்டும்பற்றி அன்பு பாராட்டவேண்டும். இது கடினமான அப்பியாசம். இதர மதங்களின் உண்மைகளைக்கற்று, நமது மதத்தின் உண்மைகளுக்கு ஒற்றப்பார்த்து சமரசங் கண்டு இதர மதத்தினருக்கும் நமது மதத்தினருக்கும் தத்துவ ஞான ரீதியாக அவ்வம்மதத்தின் கருத்துகளை விளங்கச்செய்ய நாம் பாடுபடவேண்டும். ஏனெனில் எல்லா மதங்களிலும் பூரணஞானியர் ஒரேவித உண்மையைத் தான் கூறியிருக்கிறார்கள்.

"சந்தல் பலவற்றுத் திருக் காக்ஷியர்கள் கண்டவழி
யெங்கு மொருவழியே யெந்தாய் பராபரமே"

(தாயுமானவர்.)

ஆகையால் இதர மதங்களையுங் கற்று அவைகள் அன்பு பாராட்டி, அவைகளைப் பின்பற்றுகிறவர்களுக்கு நாம் உபகாரிகளாயிருத்தல் உபரதியின் லக்ஷணமாகின்றது.

திதிக்ஷை என்பது சகிப்பு. "அமர்செயுங் காம மாதிவரி னடக்குதல் சகித்தல்." உலகில் சம்பந்திக்குங் கால், மநிதரிடமாகட்டும், நன்று தீதென்ற நிலைமைகளிலாகட்டும், க்ரோதாதி தீய குணங்கள் பிறவா வண்ணம் அடக்கமுற்றிருத்தலும், எது நேரிடினும் அது கர்மத்தால் விளைகின்றதால் அக்கிரமமாயும், அனுவசியமாயும் நேரிடுகின்றதில்லையென்ற நல்பிரஞ்ஞை பெற்று,

குடும்ப சம்பந்தமாயும் சீவனோபாய தொழில்கள் சம்பந்தமாயும் வரக்கூடாத இடுக்கண்கள் வந்திடினும், அவைகளைக்கண்டு பயம், வெறுப்பு, சோக முதலியவை கொள்ளாமல் சகித்திருத்தலும், திதிக்ஷையின் லக்ஷணமாம். இடுக்கண்கள் எவையாயினுஞ் சரியே, அவை விளையுங்கால், அவைகளைச் சகித்து அவைகளின் மேல் வெற்றிபெறக்கூடிய சக்தி நம்மிடம் கட்டப்பெற்றிருக்கின்றதா என்று சோதனை செய்யும்பொருட்டே நமது கருமத்தை யனுசரித்து அவை விளைகின்றன என்ற தீர்மானம் நமக்கிருக்கவேண்டும். மற்றும் அவ்விடுக்கண்களை சகிக்கவல்ல வலிமை நம்மிடமிருக்கின்றதென்ற நம்பிக்கை நம்மிடம் பரம ஸத்குருவானவர் பெற்றனரே என்று எண்ணி நாம் மகிழவும் வேண்டும்.

சிரத்தை என்பது தன்னிடமும் ஸத்குருவிடமும் நம்பிக்கையாம். "பரமசத்குரு நூலன்பு பற்றலே சிரத்தையாகும்." தான் தேகமல்ல, ஆன்மா என்றும், ஆனதால் சனனமரண சம்சாரத்தை தாண்ட சாத்தியம் என்றும், எவ்வித விபத்திலும் ஸத்குரு காத்தருள்கின்றார் என்றும், திட நம்பிக்கை பெறவேண்டும்.

சமாதானம் என்றது மநம் ஒரு முகப்பட்ட சமத்துவ நிலை. "சிரவணப்பொருளை தானே சித்தம் சிந்திக்குமாறு சரதமாவைக்கு மித்தை சமாதான மென்பர் மேலோர்." சலியாமல், அலையற்ற நீரைப்போல் மநம் நிற்பதே சமாதானம். ஈசுவரனின் அல்லது ஸத்குருவின் சித்தத்தையொட்டி தன்சித்தம் செல்வதே யோகம் அல்லது சமத்வம், அல்லது சமாதானம் என்றது. இதையே கீதையில் "ஸமத்வம் யோக முச்சதே,"

சமாதானமே யோகம், என்று சொல்லப்பெற்றிருக்கிறது. ஆக மேற்சொன்ன அறுவகை மநப்பழக்கங்களும் மூன்ருவது சாதனமென்ற ஷட் ஸம்பத்தியாம்.

பிறகு, மோக்ஷ பேக்ஷை நான்காவது சாதனமாகிறது. சிற்றின்பங்களுக் கிடமான விஷயங்கள் நிலையற்றன, முடிவில் துன்பந்தருவனவா யிருப்பதால், அவைகளிடம் ஆசை யொழிந்து, ஈசுவர அல்லது ஆத்ம நிலையானது நிலையுள்ளதாயும், ஆநந்த வடிவாயுமுள்ளது பற்றி அந்நிலையினிடத்து ஆசை பிறந்திருத்தல் மோக்ஷ பேக்ஷை எனப்பெறும். இதுவே உண்மையான விராகம் என்பதும். இச்சை என்பது ஆந்மசக்தி. அச்சக்தியானது இந்திரியங்களின் வழியாக விஷயங்களுக்குச் சம்பந்தமாகும்பொழுது, காமம் அல்லது ஆசை எனப்பெறும். இது விஷய இச்சை, அற்ப இச்சை, தாழ்ந்த இச்சை. இந்த இச்சை விஷயங்களைப் பற்ருமல் விடுமாயின், அது பிரவேசிக்க ஓர் இடம் வேண்டும். அதாவது அது வேருென்றைப் பற்றவேண்டும. அவ்விதப் பற்றுக்கு ஆந்மா விஷயமாகின்றது. ஆந்மா அல்லது ஈசுவரனை இச்சை பற்றிஞல், அவ்விச்சைக்குத்தான் மோக்ஷ பேக்ஷை என்றது.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." (திருக்குறள்.)

இந்நிலையைப் பற்றியே, "நிராசையே தெய்வம்," என்ருர் பெரியர்.. திருவாய் மொழியில் இதை வெகு விமரிசையாகப் பின்கண்ட பாசுரத்தில் விளக்கி யிருப்பது மேலான மநவெழுச்சியைத் தருகிறது.

"நன்றாய் ஞானங்கடந்து போய் நல்லிந்திரிய மெல்லாமீர்த் தொன்றாய்க் கிடந்தவரும் பெரும்பா ழுலப்பிலதனை யுணர்ந் துணர்ந்து, சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசை யற்றா, லன்றே யப்போதே வீடதுவே வீடு வீடாமே."

(திருவாய்மொழி.)

ஈசுவரன் அல்லது ஆத்மா அன்பு வடிவானவர்; அவரை அடைய வேண்டுமானால் நாம் அன்பு மயமாக வேண்டும். இனத்துக்கின மென்ற பழமொழிப்படி, அன்புதான் அன்பைச் சேரும். சாதாரணமா யுலக வியல்பிலே, இருவருக்குப் பற்றுண்டாக வேண்டுமானால் அது பின்கண்டபடியே நிகழ்கிறது. குடியனுக்குங் குடியனுக்கும் பற்று; சூதாட்டக்காரனுக்குஞ் சூதாட்டக்காரனும் பற்று; கள்வனுக்குங் கள்வனுக்கும் பற்று; ஸ்த்ரீ லோலனுக்கும் ஸ்த்ரீ லோலனுக்கும் பற்று; வீண்வம்பு சண்டைக்காரனுக்கும், வீண் வம்பு சண்டைக்காரனுக்கும் பற்று உண்டாகின்றது. சங்கீத வித்வான், சங்கீத வித்வானிடம் நேசிக்கிறான். தத்துவ விசாரணை செய்கிறவன், தன் போன்றாராய்ச்சி யுள்ளவனையே நாடுகிறான், நேசிக்கிறான். மதாபிமானி தன் போன்ற மதாபிமானியையே உறவு கொண்டாடுகிறான். அதேவிதம் நிரீசுவரவாதியானவன் தன்போன்ற மத நாட்ட முடையோனிடமே சினேகிக்கிறான். இச்சகஜ தர்மத்தை யொட்டி, ஈசுவரனை அடைய வேண்டுமானால் அவன் போன்று அன்பு வடிவமாக வேண்டும். ஆகையால் அன்பற்ற எதுவும் செய்யவொண்ணாது. வீண்விருதா பேச்சுகள் பேசுவதும், குரூர காரியங்கட் செய்தலும், மடபக்தியும் அன்புக்கு விரோதங்கள். பிறர் நிந்தனையும், பிறருக்கு உபகாரமற்ற பேச்சுகளும் வீண்

பேச்சுகளாகின்றன. இது கொடிது. நல்லோரும் இதனால் தீயராவர். தீயர் முன்னினுமதிக தீயராவர். ஆகையால் இது பாபகரமானது. பொழுதுப்போக்குக்காகவும் பிறர் நிந்தனையில் நமக்குப் பிறக்கும் ஒருவித ருசிகாரணமாகப் பிறரைப்பற்றி கெட்டவார்த்தைகளாடல் நமக்குச் சகசமாயிருக்கிறது. அது கொடியகாரியம். குரூரத்வம் என்பது சாதாரணமாய் மதானுஷ்டானமென்ற பெயருடன்கூடச் செய்யப்படுகிறது. பிறர் மதத்துவேஷமும், அலக்ஷியமும், பிறர் தொழுந் தெய்வ நிந்தனையும், ஆசாரிய நிந்தனையும், குரூரங்களேயாகின்றன. தெய்வங்களுக்கென்று ஆடு மாடுகளைப் பலி கொடுக்கிறதும் அநியாயகாரியம். யாகங்களில் அஜயாக முதலிய பிராணிகளின் உயிரை நீக்குவதான யாகங்கள் கொடியன. நாக்கு ருசிக்காகப் பிராணிகளை வதைத்து மாமிசபக்ஷணஞ் செய்தல் மிகவுங்கொடிது.

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள். (திருக்குறள்.)

ஈசனெனக் கருதி யெல்லா வுயிர்களையும்
நேசத்தால் நினைந்து கொள். (ஔவைகுறள்.)

சிறு குழந்தைகளை வீட்டிலும் பள்ளிக்கூடத்திலும் அடிப்பதும் பயமுறுத்துவதும் யாவற்றினுங் கொடிது. மநஉற்சாகத்திற்கென்று மிருகங்களையும் பக்ஷிகளையும் வேட்டையாடல் குரூரமான காரியம். ஆனால் காட்டு மிருகங்களான புலி, கரடி, சிங்கம், ஓனாய் முதலியன போன்றவையும், யானை முதலியனவும் இதர பிராணிகளின் உயிருக்குச் சேதத்தையும் விலசாயப்பயிர்களுக்கு சேதத்தையு முண்டாக்குங் காலையில், பிரசைகளின்

க்ஷேமத்தைக் காக்க அம்மிருகங்களை க்ஷத்திரிய தர்மத்தின்படி வேட்டையாடுவது குரூரமாகாது. ஆனால் அவ்விதம் வேட்டையாட தர்மசாஸ்திரத்தின் அனுமதிப்பெற்ற க்ஷத்திரியர்கூட, தான் ஊன் உண்பதற்கோ, அல்லது மநவுல்லாசத்திற்கோ வேட்டையாட அனுமதிபெறவில்லை.

"ஓ! துஷ்யந்த மகாராஜனே எளியாருக்கு அபயஸ்தங் கொடுப்பதற்கே உமக்கு ஆயுதங்கள் ஏற்பட்டுள்ளன. குற்றமற்ற பிராணிகளை வதைஞ்செய்வதற்கன்றே!"

(காளிதாசர் சகுந்தலா நாடகம்.)

மூடபக்தி என்பது முட்டாள்தனமான யாதாமொரு கொள்கை. அமுக்கியங்களை முக்கியங்களென்று கொள்ளலே மூடபக்தி. பத்ரகாளி, ஐயனார், மதுரைவீரன் காத்தராயன், பேச்சி ஆயிபோன்ற தெய்வங்களுக்கு பலிபீடத்தில் பலிகொடுத்தல் முக்கியமென்றும் யாகங்களில் பலிகொடுத்தல் முக்கியமென்றும், அவ்விதம் பலிகள் கொடாவிட்டால் பாபம் என்றும், தேக சௌக்கியத்திற்காக மாமிசபக்ஷணஞ் செய்வது இன்றியமையாததென்றும் கொள்கைகளைப் பெற்றவர்கள் மூடபக்தியின் திருவுருக் கொண்டவர்கள்.

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. (திருக்குறள்)

மேற்கூறிய வண்ணம் அன்புக்கு விரோதங்களான காரியங்களைவிட்டு எல்லா உயிர்களின் க்ஷேமத்திற்கான காரியங்களைப் பற்றலே மோக்ஷத்தைக் கிட்டுவிக்கின்ற உண்மையான மோக்ஷ பேக்ஷை என்பது.

இந்நான்கு சாதனங்களையும் இங்கு மிகச் சுறுக்கமாகச் சொல்லப்பெற்றது. அதிக விபரங்களை பிரம்ம ஞான சபை நூல்களில் ஒன்றான ஸ்ரீமான் கிருஷ்ண மூர்த்தி என்பார் வெளியிட்டிருக்கின்ற "ஸத்குரு பாதங்களில்" என்ற நூலிலும் இதர வேதாந்த கிரந்தங்களிலும் காண்க. இந்த விதமாகவும் இவ்வுபந்நியாசத்தின் கடையதான அத்தியாயத்தில் கண்டவிதமாகவும் தன்னைத் தயாரித்துக் கொள்வதால் ஞானதீக்ஷை பெறுவதற்கு யோக்கியமாக ஒருவர் ஞானதீக்ஷா குருவால் பரீக்ஷார்த்தமான சிஷ்யநிலையில் வைக்கப் பெறுவார். இந்தப் பரீக்ஷார்த்த சிஷ்யநிலையையும் ஞானதீக்ஷா படிகளின் விபரங்களையும் அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.



## நான்காவது அத்தியாயம்.

### மோக்ஷ மார்க்கம் ஞான தீக்ஷைகள்.

(தொடர்ச்சி.)

### 1. அருத்தம்.



உலகிலுள்ள மதங்களெல்லாம் அவ்வக்கால மநிதரின் நிலைக்குத் தக்கவாறு உண்மையைப் பலவித மாக வகுத்து வெளியிடுந் தன்மை யனவாதலின், ஞான தீக்ஷாப்படி களை இன்னவை இத்தனை என்ற பெயர், எண்ணிக் கைகளின் வித்தியாசங்களுடன் ஒப்புக்கொள்கின் றன. தத்துவஞான ஆராய்ச்சி ரீதியாகவும், ஆரிய முதலாவது வர்க்கத்தாருக்கான சனாதனதர்ம ரீதியாக வும், ஞானதீக்ஷைகள் அல்லது ஞானதீக்ஷாபடிகள் நான்கெனப் பெறும். ஞானதீக்ஷை என்றால் ஆத்ம பிரஞ்ஞை மலருதல் என்றருத்தம். பிரகிருதியை வசப் படுத்தி ஆளத்தக்க சக்தியும் ஞானமும் தீக்ஷையின் சின்னம். இதுவாயினால் காதில் ஓதும் மந்திரம் என் றும், டாம்பீகக்கிரியைக ளென்றும் ஒருநாளும் ஆகாது. ஞானகுருவிடம் முதலாவது தீக்ஷை பெற்றதருணம் முதல் மோக்ஷம் அடையும் வரையில் சீடனிடம் ஞானப் பிரகாசமானது நால்வகை தரகதிகளில் வளர்ந்துகொண் டிருக்கின்றது. தீக்ஷை பெற்றவரிடம் ஆத்ம ஞான சக்திகள் மலர்ந்துகொண் டிருப்பதால், அவரிடம் சித்தி

கள் காணப்படும். ஆகையால் தீக்ஷை என்றால் திட்டமான யோக ஐசுவரியங்கள் என்றதாகும். ஒரு தீக்ஷை பெற்றபின் அடுத்த மேல் தீக்ஷைபெற வேண்டுமானால், தான் முன்பெற்ற தீக்ஷைக்குரிய சக்திகளையும் பிரஞ்ஞாநிலைகளையும் பயிற்சி செய்து திட்டமாய் அமைப்பித்துக்கொண்ட பின்னர் மட்டுஞ்சாத்தியமாகும். அந்தந்த தீக்ஷைக்குரிய யோக பலத்தை அததிலேயே பயிற்சி செய்து, அரைகுறையின்றி, பூரணமா யமைப்பித்துக் கொண்டால் தான் மேல் தீக்ஷைபெறுவது சாத்தியமாகும். தீக்ஷையின் தன்மைக்குத் தக்கவாறு, பயிற்சி செய்யவேண்டிய யோகபலமானது தீக்ஷையின் உயர்வுக்குத்தக்கவாறு பேதமுள்ளதாயும் மேலானதாயு மிருக்கும். தீக்ஷைக்குத் தயாராகின்றவன் ஞானகுருவால் பரீக்ஷார்த்தமாய் வைக்கப்பெறுவான். அவ்விதம் பரீக்ஷார்த்த நிலையில் வைக்கப்பெற்றானென்றது சீடனுக்கு மூளை பிரக்ஞையில் தெரியாமலு மிருக்கலாம். பரீக்ஷார்த்த நிலையில் வைக்கப்பெற்ற சீடன் தனது மெய்மறந்த பொதுநல கைங்கரியத்தாலும், பக்தியாலும் ஞானோபதேசத்துக்கு அருகனென்று நடையால் காட்டுவானாகில், குருவானவர் அத்தகையோனை, அங்கீகாரம் பெற்ற சீடன் என்ற நிலையில் அச்சீடனை வைக்கின்றார். அவ்விதம் அங்கீகரிக்கப்பெற்ற நிலையிலுள்ள சீடனுடைய பிரஞ்ஞையுடன் குருவின் பிரஞ்ஞையானது பிணைக்கப்பெறுகின்றது. குருவுக்கும் அச்சீடனுக்கும் விலகா சம்பந்தம் ஏற்படுகிறது. உலகில் விவகரிக்கும் வேளையிலெல்லாம், சீடனுக்கு குருவின் பிரசன்ன ரூபமான ஞாபகமிருந்துகொண் டிருக்கின்றது. சீடனின் மனோ வாக்காதி பிரவிருத்திகளெல்லாம் குருவுக்குத்

தோன்றுகிறது. சீடன் குருவுக்கு புத்திரஸ்தானத்தை அடைகிறான்; ஞானபுத்திரனாகிறான். இந்த ஞானபிதாவுக்கும், ஞானபுத்திரனுக்கும் உள்ள உயர்நல சம்பந்தமும் அன்பும் இத்தகையதென்று எவ்வுதாரணத்தாலும் விளக்கிச்சொல்ல சாத்தியமாகவில்லை. ஆசாரியன் சீடனை இவ்வித சம்பந்தங்களினாலே தீக்ஷைக்குத் தயார்செய்த பின்னர், அதாவது சீடன் தீக்ஷைக்குத் தன்னை தயார் செய்துகொண்ட பின்னர், சீடனுக்கு முதலாவது தீக்ஷை கொடுபடுகின்றது.

## 2 பரிவிராஜகன்.

முதலாவது தீக்ஷை பெற்றவருக்குப் பரிவிராஜகன் என்றுபெயர். பரிவிராஜகன் என்றால் ஸ்திரமான வாசஸ்தலமற்றவன் என்பருத்தம். அதாவது, நாடோடிப்பரதேசி என்பதன்று. ஆனால், தன் ஊர், தன்மனை என்ற பேதமன்றி எல்லா ஸ்தலங்களையும் சமமாகக் கருதுகிறவனென்றும், தனது குருவின் ஆக்ஞையை கொண்டு செலுத்தவேண்டி உலகெங்கும் அவருடைய கைங்கரியத்தை முன்னிட்டு மானுவமானப் பற்றுகளைக் களைந்து சஞ்சாரஞ் செய்கிறவனென்றும் அருத்தம். மநிதகோடியின் உஜ்ஜீவனார்த்தம் ஸத்குரு கைக்கொண்டிருக்கும் கைங்கரியத்தில் தான் ஊழியனாகி, அவருடைய சித்தம் நிறைவேற வேண்டியதற்குத்தான் ஒரு கருவியாக இச்சீடனிருக்கிறான். இவனுக்குத் தான் "த்விஜன்," அதாவது இரண்டாவது பிறப்பு என்ற ஞான ஜன்மத்தைப்பெற்றவன் என்றுசொல்வது. ஞானதீக்ஷையானது சீடனின் சூக்கும அவஸ்தையில் கொடுபெறுகின்றது. இதையே கைவல்யத்திலும் "உடம்பினுட் சிவனைப்பார்த்து பதேசமோதுவாரே"

என்ற விடத்துங்காண்க. சில சீடர்கள் விஷயத்தில் இத்தீக்ஷையானது ஸ்தூல மூளை அறிவுக்கு எட்டா மலுமிருக்குமென்று தெரிகிறது. என்றாலும், தீக்ஷை பெற்றதன் முன்னிருந்த சீடனது நிலைமைக்கும், அதன் பின்னிருக்கும் அவனது நிலைமைக்கும் அவனது ஞானம், நடை முதலிய குணங்களில் எவ்வளவோ மேலான மாறுதல் காணப்பெறும். கர்ப்பத்தினின்று வெளியான சிசுவானது திரும்பவும் கர்ப்பத்தினுட்செல் வது ஒருக்கால் சகசமாயிருந்தாலு மிருக்கலாம். ஆனால், இந்த முதலாவது தீக்ஷைபெற்ற சீடன் திரும்பவும் நசுவர விஷயங்களில் கருத்தைசெலுத்துவான் என்பது, ஒருநாளுஞ் சகசமில்லை. இவன் இரண்டாந்தீக்ஷைபெற வேண்டுமானால் மூவகைக் குற்றங்களைக் களையவேண் டும். அவையாவன: விபரீதம், சந்தேகம், மூடபக்தி என்பனவாம். விபரீதம் எனுங்குற்றத்தைக் களைவ தென்றால், அது, தேகத்தை தான், நான் என்று கரு தாமையும், தான், நான் என்பது ஆத்மா என்றுணர் தலுமாம். தான் தூலமல்லா சூக்கும நிலையினனென்று தேகத்தினின்று வேறாகத்தன்னைப் பார்க்கக்கூடிய சக்தி யைப்பெற்றவனாதலால், சரீரத்தைத்தான் எனக்கருதும் மருள் அதாவது "விபரீதம்" தன்னை அணுகாவண் ணம் இவன் காத்துக்கொள்ள வேண்டும். எல்லாப் பிராணிகளையும் தானாகவே யுணர்வில் காண்கின்ற நிலை யினின்று அவன் தவறக்கூடாது. தவற மாட்டான் என்றே எண்ணவேண்டி யிருக்கிறது.

सर्व भूतस्थमात्मानं सर्व भूतानि चात्मनि।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥

"யோகத்தாலே சமாதான நிலைபெற்ற ஆந்மா (மநிதன்), எல்லாப் பிராணிகளிலும் ஆந்மாவையும், ஆந்மாவிலே எல்லாப் பிராணிகளையும் பார்க்கிறான்; யாவற்றையும் அவன் சமமாகப் பார்க்கிறான்."

(கீதை 6-வது அத். 29-வது சுலோ.)

என்றதால் முதலாவது தீக்ஷைபெற்ற சிடனை பரிவிராஜகன் "விபரீத" மற்றிருக்க வேண்டும்.

சந்தேகமெனுங் குற்றங் களைதலென்றால், அது சூக்கும உலகங்களிடத்தும், தீக்ஷா மார்க்கத்தினிடத்தும், ஞான ஸத்குருக்களிடத்தும் சந்தேக மில்லாதிருக்கும் வண்ணம் காத்துக்கொள்ளல். இதிஹாச புராணங்களின் வாயிலாகத் தெரிந்து கொண்டிருக்கும் சூக்குமாதி உலகங்களைப் பற்றி அநுமானத்தா லென்றதன்றி பிரத்தியக்ஷத்திலும் அவை இருக்கின்றனவெனு நிச்சயத்தைத் தவறவிடக்கூடாது. ஞான ஸத்குருமார்கள் இருக்கின்றார்களென்ற விஷயத்திலும், ஞானதீக்ஷா மார்க்கம் இருக்கின்றதென்ற விஷயத்திலும் மேற்சொன்னப் பிரத்தியக்ஷ அநுபவத்தைத் தவறவிடக் கூடாது. புனர்ஜன்மம் உண்டென்ற உண்மையிலும், கர்மச்சட்டத்தின் தீர்மானமான நடவடிக்கைகளிலும் அவனுக்குச் சந்தேகஞ் சனிக்கக்கூடாது. மூடபக்தி எனுங் குற்றம் நீங்கியிருத்தலாவது, அமுக்கியங்களை முக்கியங்களெனக் கருதாமையே. மதாசாரச் சடங்குகளும், சம்ஸ்காரங்களும், பிரதிமை முதலியனபோன்ற சின்னங்களும், உலகினரின் அபிப்பிராயங்களும் இச்சீடனுக்கு முக்கியங்களாகா. ஆகையால் அவைகளை அவன் பற்றினால் அவனது உயர்ந்த ஞானநிலைக்கு அது குற்ற

மாகும். அவைகளைத் தியசிக்கவேண்டும். சாதாரண உலகத்தாருக்கு எவ்வளவோ பிரயோசனமுள்ளனவா யிருக்கின்ற சடங்குகளும் கிரியைகளும் இவனுக்குப் பிரயோசன மில்லாமையால், அவைகள் இவனுக்கு அழுக்கியங்களே. தனது மநோசக்தியைக் கொண்டு, மேற்சொன்னவைகளா லாகக்கூடிய காரியங்களை அவன் முடித்துக்கொள்ள வேண்டிய நிலையிலிருக்கிறான். இவ் விதமாக மேற்சொன்னபடி மூவகைக் குற்றங்களைக் களைதலென்றபடியில் இவன் பெறவேண்டிய யோக ஐசு வரியத்தைப் பெற்றபின் இவனுக்கு இரண்டாவது தீக்ஷை கொடுக்கப்பெறும்.

### 3. குடீசகன்.

இரண்டாவது தீக்ஷை பெற்றவருக்கு, குடீசகன் என்று பெயர். இரண்டாவது தீக்ஷைபெற்றவன் சித்திகளை விருத்திசெய்ய வேண்டும். இது இவனது முக்கிய அலுவல். இந்நிலையிலே தான் குண்டலினி எனுஞ் சக்தியைப்பற்றி இவன் பயிற்சிசெய்ய வேண்டியதா யிருக்கிறது.

"காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி
யுருகிவரு மமிர்தத்தை யுண்டுண் டுறங்காம
லுணர்வான வழியைநாடி......" (தாயுமானவர்.)

"உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவைக்
கருத்தினா லிருத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்டரித்த நாதர்பாதம் அம்மைபாத முண்மையே.
(சிவவாக்கியர்.)

தூலதேகத்தினின்று சூக்கும தேகத்தைப் பிரித்து சூக்கும உலகங்களில் சஞ்சரித்து, ஆராய்ச்சி செய்கிறதான யோக சித்திகளைப் பயிற்சிசெய்ய வேண்டும். இவ்வளவு உயர்ந்த ஞான நிலைபெற்ற பின்னர் மட்டுமே கையாடவேண்டிய குண்டலினி சக்தியை, நம்போன்ற தாழ்ந்த ஞானதரகதியிலுள்ளார் பயிற்சி செய்தலென்றால் அது எங்ஙனம் நலத்தை யூட்டும்? யோகசித்தியடையவேண்டுமென்ற ஆசாபிசாசத்திற்கு வசமாகி, நம்மில் அநேகர் சில தாந்திரிக நூல்களில் சொல்லியிருக்கும் விதமாக குண்டலினியைப் பயிற்சிசெய்ய எத்தனிக்கிறார்கள். எத்தனித்துத் தீய மார்க்கங்களில் போகிறார்கள்; அல்லது ஒன்றிருக்க மற்றொன்றாக அந்த சக்தியின் காரியத்தால் பலவித அபாயங்களுக்குமுள்ளாகிறார்கள். மூடர்களான அவர்கள், அபின், கஞ்சா, கள், சாராயம் முதலிய லாகிரிவஸ்துக்களை உட்கொண்டுத் திரிகின்ற, கேவலம் வேடதாரிகளான பாஷண்டர்களையோ அல்லது ஹடயோகிகளையோ தமக்கு மேற்கண்ட காரியத்திற்காக குருக்களாகக் கருதி அவர்களை நாடுகின்றனர். "குருடும் குருடும் குருட்டாட்டமாடி குழியில் விழுமாறே" என்றபடி மேற்கண்ட போலிகுருவும் போலி சீடனுமானவர், இருவரும் உண்மையான ஞானசூனியரானதால், அவர்கள் செல்லும் யோகமார்க்கத்தின் வழியாகச் சென்று மருள் எனும் படுகுழியி லாழ்கின்றார்கள். அந்தோ! அத்தகையோரின் பரிதாபகரமான நிலைமையை என்னென்று சொல்வேன்! உண்மையான ஜீவன் முக்தர்களான மகாத்மாக்கள் அதாவது ஞான ஸத்குருமார்கள் எனும் புராதன மகருஷிகள், மேற்சொன்ன அந்தகருக்குக் கண்திறக்கச்

செய்வராக! நிற்க, இரண்டாவது தீக்ஷையில் சித்திகளை அப்பியாசஞ்செய்து வேண்டிய யோகசக்திகளைச் சரியாகப் பெற்றபின், மூன்றாவது தீக்ஷை கொடுக்கப் பெறும்.

## 4. ஹம்ஸன்.

மூன்றாவது தீக்ஷை பெற்றவருக்கு "ஹம்ஸன்" என்று பெயர். "அஹம் ஸஃ" = நான் அது, என்ற உணர்வு இவரதுநிலை. சரீரத்ரயம் தானல்லவென்றும், பரத்தி னம்சமான ஆத்மா தாமென்றும், பரமாத்மாவுடன் ஏகமா யிருக்கிறனென்றும் உணர்ந்து, உணர்ந்த விதம் மூளையின் நினைவுக்கும் கொண்டுவந்து அவ்வனுபவத்தை சாக்கிரதாவஸ்தையிலும் பெற்றிருக்கிறான்.

"பாலரொடு பேயர் பித்தர் யான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே".

(தாயுமானவர்)

அவருக்கு மூவுலகிலும் எப்பொருளிடத்தும் இச்சையின்றாம். பிரத்யக் பாவ மியாவு மற்றவர் அவர். யாவரையும், யாவற்றையுந் தானாகவே யுணருகின்ற, தான் பிற னென்ற எண்ணமே யொழிந்த நிலையினராம் அவர். எவ்வளவு சூக்ஷ்மநிலையிற்கூட இவரிடம் இராகத்துவேஷங்கள் காணப்படா. "நான் பிரஹ்மமாகிறேன்" என்ற நுகர்ச்சி இவரதாகின்றது. இந்நிலையில் துவய பாவனை யொழிந்திட, நான்காவது தீக்ஷை பெறுகிறான்.

## 5. பரமஹம்ஸன்.

நான்காவதுதீக்ஷைபெற்றவன்"பரமஹம்ஸன்", எனப் பெறுகிறான்: "நான், அது" என்ற உணர்விலும் மேலான உணர்வைப் பற்றிய நிலை, நான்காவது

தீக்ஷா நிலை; அவ்வளவு வரையிற்கூட பேதமற்றநிலை. அந்நிலையில் தான் கடையதான பந்தமாகின்ற அஞ்ஞானம் வேருடன் அறுகிறது. இது துரியநிலை என்றும் வழங்குகிறது. துரியாநுபவம் பரமஹம்ஸனின் தூல மூளை யறிவுக்குச் சதா தோன்றிக்கொண்டிருக்கிறதாம். இந்த நிலையில் ரூபராகம் (சரீராபிமானம்), அரூபராகம் (அசரீராபிமானம்,) மானம், அவித்தைகள் கட்டுடன் அறுகின்றனவாம். மநித சன்மத்தின் கடை நிலையாகிற பிரஹ்ம நிர்வாணத்தைச் சமீபித்துள்ளவனே பரமஹம்ஸன்.

लभंते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधायतात्मानः सर्वभूत हितेरताः ॥

“இருடிகள் தங்கள் குற்றங்களைக் களைந்து, துவைய பாவனை யொழிந்து, இந்திரிய மனோ நிக்ரகங்கட் பெற்றவர்களாகி, ஸர்வபிராணிகளின் ஹிதார்த்தமான கைங்கரிய பரர்களாகிப் பிரஹ்ம நிர்வாண நிலையை அடைகிறார்கள்.”

(கீதை 5-வது அத். 25-வது சுலோ)

இந்த சுலோகம் பரமஹம்ஸ நிலையை குறிப்பிடுவதாகத் தெரிகிறது. பிரஹ்ம நிர்வாணம் பெற்றவன், ஜீவன் முக்தன் எனப்பெறுவான். ஜீவன் முக்தி நிலை ஐந்தாவது தீக்ஷையாம். சுயமாயடைய வேண்டிய நிலை அது. ஐந்தாவது தீக்ஷை பெற்றவருக்கு அசேகன் என்ற பெயராம். பரீக்ஷார்த்தமாய் வைக்கப்பெற்ற ஒன்று முதல் நான்குடன் முடிவாகிற தீக்ஷைகளுக்குத் தான் ஞானதீக்ஷா மார்க்கம் என்று பெயர். அம்மார்க்கத்தைப்பற்றி இன்னும் அதிக விபரங்கள் பிரம்மஞான

சபை கிரந்தங்களில் விமரிசையாகச் சொல்லப்பெற்றுள்ளவாறு யாவரும் படிக்கலாம். அம்மார்க்கத்தின் முடிவு ஜீவன் முக்தரின் பிரதம நிலை. ஜீவன் முக்தர்களைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.



## ஐந்தாவது அத்தியாயம்.

### ஞானதீக்ஷா குருக்களெனுஞ் சீவன் முக்தர்கள்.

### 1. *அவர்களின் உயர் நிலையும் தொழிலும்.*



மூந்தின அத்தியாயத்தில் கூறிய வண்ணம் பிரஹ்ம நிர்வாணம் பெற்றவருக்கு ஜீவன் முக்தர்கள் என்ற பெயர். பரீக்ஷார்த்தமாய் வைக்கப்பெற்ற சீட நிலைமுதல் பரமஹம்ஸ நிலையின் முடிவு வரையிலான தீக்ஷாமார்க்கத்தின் சிகரத்தில் அதாவது முடிவில் சீவன் முக்தர்கள் இருந்துகொண்டு, அம்மார்க்கத்தைக் காத்துக்கொண்டு, அம்மார்க்கத்தில் நடந்து கொண்டிருக்குஞ் சீடர்களுக்கு ஞானதீக்ஷைகளைக் கொடுத்து வருவதால், அவர்களுக்கு ஞானதீக்ஷா குருக்களென்றும் பெயருண்டு. அவர்கள் முன் பல ஜன்மங்களில் தீக்ஷா மார்க்கத்தில் நடந்து ஒரு ஜன்மத்தில் கடைநிலையை யடைந்தவர்கள். அதனால் அவர்கள் கடைநிலையை நாடி நடக்கும் சீடர்களுக்கு

தீக்ஷா மார்க்கத்தில் உதவிசெய்து வருகிறார்கள். மதங்களின் வித்தியாசத்திற்குத் தக்கவாறு அவர்களுக்குப் பல நாமங்கள் வழங்குகின்றன. ஞானகுருக்க ளென்றும், ஆசாரியர்களென்றும், தேவ தூதுவர்களென்றும், கடவுளின் மக்களென்றும், மகருஷிகளென்றும், மகாத்மாக்களென்றும் அவர்களுக்குப் பல பெயர்கள் வழங்குகின்றன. தமிழ் நாட்டில் ஆழ்வார்கள், நாயன்மார்களென்ற யாவரும் இத்தகையரே. இந்த ஜீவன் முக்தர்கள் சகல பிராணிகளின் க்ஷேமத்தைக் கருதி சதா சர்வகாலமும் கைங்கரியஞ் செய்கிறார்கள். அது அவர்களின் தொழில். வீடடைந்தவர்கள் தூல தேகந்தரித்தாவது அல்லது தூல தேகத்தை நிக்ரஹஞ் செய்தாவது அவரவர்களின் கைங்கரியத்தின் தன்மைக்குத் தக்கவாறு ஈசுவரனின் கருவிகளாக, அவனது சித்தத்தை மூவுலகிலுங்கொண்டு செலுத்தி வருகின்றார்கள். அவர்களில் தூலதேக முடையாருக்கு மட்டுமே ஜீவன் முக்தர் என்ற குறிப்பிட்ட பெயர் வழங்குகின்றது. பூ, புவர், சுவர் என்ற மூவுலகும் அவர்களின் தடங்கலற்ற ஏகதிருஷ்டியில் அதாவது சாக்கிரதப் பிரக்ஞையில் இருக்கின்றன.

அண்டபகி ரண்ட மனைத்து மொருவடிவதாக
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியையுங் காண்பேனோ.

(தாயுமானவர்.)

அவர்கள் ஆத்ம ரூபிகள். ஆத்மா சர்வவியாபியாதலின், ஜீவன் முக்தர்கள் எல்லா ஜீவராசிகளையுந் தங்களின் அங்க அவயவங்களாகப் பார்க்கிறார்கள். கல்மண், மரங் கொடி செடி, பிருக பக்ஷி ஊர்வன, மானிடர், தேவர்,

ஆண் பெண்பாலர் யாவரையுந்தங்க ளங்கங்களாகப் பார்க்கிறார்கள்.

விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய் ஞானக் கண்ணாரக் கண்டவன்பர் ........

(தாயுமானவர்.)

அதாவது யாவரின், யாவற்றின் உயிரினுள்ளுயிராகச் சீவன்முக்தர்க ளிருக்கின்றனர் என்று விளங்குகிறது. தானென்றும் நானென்றும் அவர்கள் நினைக்கும்பொழு தெல்லாம், உலகிலுள்ள எல்லா சீவராசிகளையு மந்தத் தான் நானென்றதிற் சேர்த்துப் பார்க்கின்றார்கள்.

அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
யெங்குமே னேனென்ற தென்னே பராபரமே.

(தாயுமானவர்.)

எல்லா சீவராசிகளின் சுகமுந்துக்கமு மிவர்களதே யாம். அஞ்ஞானத்தால் சுபாசுப கருமங்களிலகப்பட் டுச் சனன மரணமெனுஞ் சமுசாரச் சக்கரத்திற் சுழன்றுத் திரியு மநிதகோடியிடங் கருணைவெள்ள முடையராகி, அஞ்ஞானப் பிணியினின்று அவர்களைத் தப்புவிக்க விரதங்கொண்டுச் சீவன் முக்தர்கள் பாடு பட்டு வருகிறார்கள். சகசத்தில் தான் பெற்ற பிள்ளை யிடம் அன்பு நிறைந்த தாயொருவள் தன் பிள்ளை பிணியால் மரணவஸ்தையிலிருக்குங் காலையில் எவ்வ ளவு மந உருக்கம் பெற்றவளாயிருப்பாளென்றும், பிள் ளையைப் பிழைப்பிக்கும் பொருட்டு எவ்விதம் அவள் தன்னுயிரையும் லக்ஷியஞ் செய்யாமல் நானாவித முயற்சிகளைச் செய்வாளென்றும் நீங்களே கண்டு கொள்க. இந்த தாய்க்குத் தன் பிள்ளையிடமுள்ள

அன்பும், அவ்வன்பினுல் தூண்டப் பெற்ற சகிப்பும் ஒரு பங்கானல், சீவன் முக்தருக்குச் சீவர்களிடமுள்ள அன்பும், அவ்வன்பால் தூண்டப்பெற்ற சகிப்பும் நூறு பங்கு எனத்தகும். சீவர்களின் மீட்சிக்கென்று பாடுபடுவது சீவன் முக்தர்களுக்கு வெகு சந்தோஷமான காரியம். நமது தேகத்தின் பிணியை நீக்கப் பாடுபடுவது நமக்குச் சகசமன்றோ? அவ்வாறே சீவன் முக்தரும் தமது தேகமெனத்தக்க சீவர்களின் அஞ்ஞானப் பிணியை நீக்கப் பாடுபடுவதுஞ் சகசமே. அவர்கள் ஈசுரசித்தானுசாரமாகக் கருமங்கள் செய்கின்றமையால் அவர்களுக்குக் கருமபந்தமில்லை. அவர்கள் நம்போன்ற மனித வடிவமுடையோரே. முன் பல சன்மங்களில் அவர்கள் நம்போன்ற மானிடராக எண்ணிறந்த குற்றங்களைச் செய்து, தவறுகட்செய்துத் துன்புற்றவர்களே. சன்மங்கடோறு மஞ்ஞானத்தால், கர்மபலன்களை விளைவித்துக் கொஞ்சங் கொஞ்சமாகத் திருந்தமடைந்து ஞானனுபவ மெள்ள மெள்ள வளர, வளர, முடிவிலொரு சன்மத்தில் பல சன்மப் பழக்கத்தாலே முதிரப்பெற்ற பூரண ஞானத்தால் பரிபூரணரானவர்களே யவர்கள்.

बहूनां जन्मनामंते ज्ञानवान्मांप्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मासु दुर्लभः ॥

அநேக சன்மங்களின் அந்தத்தில் ஞான பூரணனுகிக் கிடைத்தற்கரியனை அம்மகாத்மாவானவன், "யாவும் வாசுதேவனே" என்ற பிரக்ஞையுடையானுகி என்னிடஞ் சேருகிறான்.

(கீதை 7-வது அக். 19-வது சுலோ.)

பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சித்து நல்லுணர்வு பெற்றநலம்.

(ஔவை)

சீவன் முக்தர்கள் ஸம்ஸார துக்கத்தை யனுபவித்த வர்களானதாலும், அதினின்று மீட்சி யடைந்தவர்க ளானதாலும், அவ்விததுக்கத்தி லாழ்ந்திருக்கும் மநிதகோடியை மீட்சிபெறச் செய்ய வல்லோரா யிருக்கின்றனர். அவர்கள் உலகில் எலலாத் தேயங் களிலு மிருக்கின்றார்கள்; எல்லா சாதிகளிலுமிருக் கிறார்கள். அனேகர் இவ்வாரியாவர்த்தத்தில் இமய மலை வடசாரலில் இருந்து ஆரிய சரீரங்களைப் பெற்று வாசஞ்செய்கிறார்கள். அனேகர் இங்கிலாந்து முதலிய ஐரோப்பிய தேயங்களில் வெள்ளைக்கார சரீ ரங்களை உடைத்தாயிருக்கிறார்கள். அவர்கள் தூலதேக சம்பந்தமான சாதி, மதம், நாடு முதலிய கட்டுப்பாடு களைக் கடந்தவர்கள். மநிதகோடிகளிடம் சமமான காருண்யமுடையரே யவர்கள்; மநிதகோடிகளை ஓரே குடும்பமாகப் பார்க்கின்றார்கள். தன் நாடு, பிறர்நாடு; தன்மதம், பிறர்மதம்; தன்சாதி, பிறர்சாதி, என்ற வித்தியாசங்களே அவர்களிடம் இல்லை. தேசாபிமா னம், மதாபிமானம், சுயசாதி யபிமானங்களுடைய நம் போன்ற சாதாரண உலகினர் குறித்த நாடு, மதங் களுக்கு எவ்வளவு கைங்கரியங்கட் செய்யக்கூடுமோ அதைவிட அனேகமடங் கதிகமாகக் குறித்த நாடு மதங் களுக்கு அம்மகாந்மாக்கள் கைங்கரியங்கட் செய்து வரு கிறார்கள். அவர்கள் மோக்ஷமார்க்கத்தைச் சீடர்களுக்

குபதேசித்து வருகிறார்கள். அவர்களைக் கடவுளுக்கு மொப்பிடுவதுண்டு.

குருவுருவங் கொண்டிக் குவலயத்துட்
டோன்றிப் பருவரலை நீக்கும்பரன்.

(வள்ளலார்)

இம்மகாத்மாக்கள் உலகின் உயர்நலங்களுக்காகப் பல துறைகளில் பாடுபடுகிறார்கள். ஆத்மாநுபவ, தேஜோமயாநந்த மாரியைச்சதா மநிதகோடிகளின் மேல் சொரிந்துகொண்டிருக்கிறார்கள். நாம் நம்முடைய இதயகந்திகளாகின்ற காமக்ரோதாதிகளினின்று மநதைச் சாந்தமேனுக்கச்செய்துத் தியானிக்கும் நேரத்திலோ, அல்லது உலக நலங்களுக்கான சிந்தனைகளையும் நாட்டங்களையும் விருத்திசெய்யுஞ் சமயத்திலோ, நம்மிடம் ஒருவகை மநவெழுச்சியும், தெளிந்த அறிவும், ஆநந்தமுங் காணப்பெறுவாம். இந்த சாந்தநிலை, ஆநந்த நிலை, அவர்களின் மேற்சொன்ன தேஜோமயாநந்த மாரியின் ஒரு அம்சமேயாம். திருவிழாக்களிலும், நதி தீரங்களிலுந் திரளான சனங்கள் கூடியிருக்குஞ் சமயங்களிலும், இதிஹாசபுராணங்கள் பிரசங்கமாகின்ற இடங்களிலும், தேசிய ராஜ்ய சீர்திருத்தங்கட் சம்பந்தமாகக் கூட்டங்கள் கூடிப்பிரசங்கங்கட் செய்யும் நேரங்களிலும், மதங்களையும் ஆசாரங்களையுஞ் சீர்திருத்தஞ்செய்ய வேற்பட்ட ஒவ்வோர் யத்தனிப்பிலும் நமது பிரஹ்மஞானசபை போன்ற கூட்டத்திலும் இம்மகாத்மாக்கள் மேற்சொன்ன தேஜோமயாநந்த மாரியைச் சொரிகின்றார்கள். உலக நாகரிகங்களைச் சீர்திருத்துவதிலும், பல்வேறு சமயங்களின் மடங்குகளை உயிர்ப்பிக்கும் வழிகளிலும் அவர்கள் தமது சக்தியை உபயோகிக்கிறார்கள். புதுப்பொதிர

சாஸ்திரவேறுனர்களைப் பிரகிருதி ஆராய்ச்சியில் ஒப்பற்ற நுண்ணறிவுடையன பல பேடான விஷயங்களைத் தெளிவுறச்செய்து வருகிறார்கள். உலகில் வைத்தியானுத்திர, தர்மாதர்ம நிலைமைக்கட்சம்பந்தமாக ஜாதிகளின் நிலை காட்டவேண்டி ஒரோர் காலத்தில் விளைகின்ற, பெரிய புத்தகங்களுங்கூட இம் மகாத்மாக்களின் சம்பந்தத்தாலே வெளிப்படுகின்றன. புத்தகங்களில் பின்விளையப் போகும் முடிவினை முன்னதாக, மகாத்மாக்கள் நிர்மாணித்து விடுகிறார்கள். அந்நிர்மாணங்களின் படிதான் உலகில் யுத்தமும் ஜயாபஜயங்கட்டிசினை நிமித்த மாத்திரமாகக் கொண்டு முடிவினைப் பெறுகிறது. இவ்வாறு அவர்களின் மகோன்னதமான செயல்களைக் காணலாம்.

## 2. பிரம்மஞான சபையும் தீக்ஷாகுருக்களும்.

இம்மகாத்மாக்கள் யாவரும் பிரம்மஞான சபை (Theosophical Society) க்குப் போஷகர்களா யிருக்கிறார்கள். ஜீவன் முக்தர்களாம் அவர்களில் இருவர் பிரம்மஞான சபையின் உண்மையான கர்த்தாக்களா யிருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய சிஷ்களான ஹெலினு பெட்ரோனு ப்ளாவட்ஸ்கி அம்மையாரையும், ஹென்றிஸ்டீல் ஆல்காட் துரையையும் வெளிக்காரணமாகக் கொண்டு உலகில் பிரம்மஞான சபையை ஸ்தாபித்திருக்கிறார்கள். அம் மகான்களை இன்னார் என்று தெரிந்துகொள்ள வேண்டி, யாது சாஸ்திரங்களைச் சில பண்டிதர்கள் ஆராய்ந்து பார்த்து, அவர்கள் பாகவத புராணத்தில் சொல்லப்பெற்ற இருவராகத்தா னிருக்க வேண்டுமென்று அநுமானிக்கப் பெற்ற காலத்தில், அவ்வநுமானப்படி விஷயஞ்சரியான

தென்று நிர்ப்பாணம் ஏற்பட்டிருக்கிறது. அதாவது தகுதியானவர்களால் விஷயம் உண்மைதா னென்றும் ஒப்புக்கொள்ளப் பெற்றிருக்கிறது. பாகவதபுராணம் 12-வது ஸ்கந்தம் மூன்றாவது அத்தியாயத்தில் பின் கண்ட சுலோகங்களிருக்கின்றன.

देवापिः शन्तनोर्भ्रातामरुश्चेक्ष्वाकुवंशजः ।
कलापग्राम आसाते महायोगबलान्वितौ ॥
तावुपेत्य कलेरन्ते वासुदेवानुशिक्षितौ ।
वर्णाश्रमयुतं धर्मं पूर्ववत् प्रथयिष्यतः ॥

"சந்தனுவின் சகோதரரான தேவாபியும் இக்ஷ்வாகுவம்சத்தினரான மருவும் மகாயோக பலங்களைப் பெற்றவர்களாகி கலாபக் கிராமத்தில் வாசஞ்செய்கிறார்கள். இருவரும் வாசுதேவரால் உபதேசிக்கப்பெற்று கலியுகாந்தத்தில், பூர்வமிருந்ததைப் போன்ற வர்ணாசிரமங்களை ஸ்தாபனஞ் செய்வார்கள்."

இந்த தேவாபி மரு என்ற இரண்டு ருஷிகளை பிரம்மஞான சபையின் கர்த்தாக்களென்று கண்டு கொள்ளப் பெற்றது. பிரம்மஞான சபையானது அதன் அங்கத்தினருள் பரீக்ஷார்த்தமான சிட நிலையிலுள்ளவர்களையும், ஒன்று முதல் நான்கு வரையிலுள்ள ஞான சோபானப்படிகளிலுள்ள சிடர்களையும் அடக்கிக்கொண்டிருக்கிறது. அதாவது பரமஹம்சநிலை வரையிலுள்ள ஞானிகள் இச்சபையில் அங்கத்தினரா யிருந்து இச்சபையை நடத்திவருகிறார்கள். இச்சபையின் முக்கியஸ்தர்களானவர்களில் அநேகர் இத்தகையரே. நம்போன்று உண்டுடுத்து விவகரிக்கின்றதால்

சாதாரணர் என்று உலகினர் அவர்களைப் பற்றி எண்ணுவது சகசமாயிருக்கிறது. ஆனால் தாயுமான சுவாமிகள் அத்தகைய ஞானிகளைப் பற்றிச் சொன்னதாவது :

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர் விளையாட்டே சுகங்காண் பராபரமே.

என்ற பாட்டினால், ஞானமார்க்கத்தைப் பற்றின ஆராய்ச்சியுள்ளவர்களுக்குத் தான் ஞானிகள் நிலை வெளியாகுமென்று கருத்து விளங்குகிறது. மற்றவர்கள் வெளிவேடத்தைக் கண்டு மருள்வார்கள். இந்நாளிலும் தீக்ஷாமார்க்கமிருக்கின்றது ; ஞான தீக்ஷா குருக்களுமிருக்கிறார்கள் ; நம்போன்றவர்கள் ஞான குருக்களையடைந்து தீக்ஷை பெறத்தயாராகக் கூடிய சௌகரியங்களு மிருக்கின்றன. பிரஹ்மஞான சபையானது மேற்சொன்ன எல்லாவித சௌகர்யங்களையும் பெற்றிருக்கின்ற ஸத்ஸங்கமாயிருக்கின்றது. "சமயங் கடந்த மோன சமரஸம்" என்று தாயுமானவர் சொன்ன சமரஸ ஸன்மார்க்கமே இந்த சபை, என்று சொல்லத் தகும். கலியுகாந்தத்தில் புதிய நாகரீகத்தை ஸ்தாபிக்க வேண்டியதற்கான ஜீவவித்துக்களைச் சேகரிக்கவேண்டியே இச்சபையை தேவாபி மரு என்னும் இருடிகள் உலகில் ஸ்தாபித்திருக்கின்றனர். இத்துடன் வேறொரு உத்தேசமும் உண்டு. அதாவது : மேற்சொன்னவாறு பாகவத சுலோகப்படி கலியுகாந்தத்தில் அந்த இருடிகளால் ஸ்தாபிக்கப் பெறவேண்டிய நாகரீகத்திற்கு அனுகுணமாகச் சமீபகாலத்தில் ஆரிய சாதியார் சம்பந்தமாக ஓர் நாகரீகம் உண்டாக்கப் பெறும். அந்நாகரீகத்தை யுலகில் நாட்டுவதற்குப் பிரதி

கலங்களானவைகளைத் தவிர்த்து உலகத்தை தயார் செய்ய வேண்டியதற்காக ஜகத்குரு ஒருவர் சமீபத்தில் நம்மத்தியில் வரப்போகிறார். இந்த உண்மைகளைப் பரவச் செய்து ஜகத்குருவை வரவேற்கிறதற்கு உலகைத் தயாரித்தலென்ற மற்றொரு உத்தேசமும் பிரம்மஞான சபையின் ஸ்தாபனத்திற்குக் காரணமாகும்.

## 3. குருபரம்பரையும் ஜகத்குருவின் அவதாரமும்.

பிரஹ்ம ஞானசபைக்கு உண்மையான தலைவர்களான மேற்சொன்ன இரண்டு இருடிகளும், இன்னும் அனேக ஜீவன் முக்தருஞ்சேர்ந்த "வெள்ளியம்பல" மென்ற இருடிகளின் கோஷ்டி உலகில் தொன்றுதொட்டு வெகு காலமாயிருந்து வருகின்றது. அந்த இருடிகளும் அவர்களின் ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்ட பரிவிராஜகர் முதல் பரமஹம்ஸனீறாக விருக்கின்ற சீடர்களும் சேர்ந்து ஞான குருபரம்பரையாகின்றனர். அந்தப்பரம்பரையினின்று காலத்துக்குக் காலம் உலகில் ஞானத்தைப் பரவச்செய்ய தூதுவர்கள் அனுப்பப் பெறுவது வழக்கம். லௌகிக நாகரீகங்களும், மதங்களும் அவ்வாறு ஏற்பட்டவைகளே. மதங்களில் சீர்திருத்தங்களும் அவ்வாறு ஏற்பட்டிருக்கின்றன. அந்தக் குருபரம்பரையில், வியாசாதி முனீசுவரர்களும், பிருகுவாதி இருஷீசுவரர்களும் சங்கர ராமானுஜ மத்வாதி சித்தாந்த ஆசாரியர்களும், ஆழ்வார்களும், நாயன்மார்களும், பரமஞானகுருவான புத்தர், தயாநிதியான கிருஸ்து, பரிசுத்த ஞானியான ஜோராஸ்தர், பரமஞானியான மகமது நபி என்ற மதஸ்தாபனாசாரியர்

களும், அவர்களைப்போன்ற மற்றனேகரும் ஒரே ஞான குருபரம்பரையைச் சார்ந்தவர்களாகி, உலகில் ஓரோர் காலத்தில் தோன்றி மதஸ்தாபனங்களும் சீர்திருத்தங் களுஞ் செய்து வந்திருக்கிறார்கள்.

வாழையடி வாழையென வந்ததிருக்கூட்டம
ரபினில்யான் ஒருவனன்றோ....... (திருவருட்பா.)

இப்பொழுது, உலகில் ஒரு லோக குருவானவர் சீக்கிரமா யவதரிக்க வேண்டியதற்காவசியகங்க ளிருக்கின்றன. உலக வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் இயக்க முண்டாகி தடுமாற்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. மதங் களைப்பற்றிப் பேசுமிடத்து, அவைகள் சீர் குலைந்திருக் கின்றன. மூட பக்தி யொரு பக்கமும், அவ நம்பிக்கை மற்றொரு பக்கமுமாயிருந்து மதங்களின் சீர்கேட்டை யுண்டாக்கி யிருக்கின்றன. அவ்வித சீர்கேட்டை பிரம்மஞான சபையும், அதுபோன்ற வேறுபல சபை களும் ஒருவாறு செம்மைப்படுத்தி யிருக்கின்றன. ஆனாலும் பழைய மதங்களின் உண்மைகளை உயிர்ப் பிக்கவேண்டியதான நிலையிலே இன்னும் மதங்களிருந்து கொண்டு வருகின்றன.

வர்ணாசிரம தர்மத்தை எடுத்துக்கொண்டாலோ, அது இன்னுமதிகக்கேடான நிலைமையிலிருக்கிறது. நிலை தவறி சீர்கெட்டுத் தடுமாற்ற நிலையிலிருக்கிறது. குணத் திற்கும், கர்மத்திற்குஞ் சம்பந்தமேயில்லாதிருக்கிறது. குணகர்ம விபாகரூபமான வர்ண தர்மமானது தாறுமாறா யிருக்கின்றது. மனிதர்கள் இருக்கின்ற நிலைமைக்குத்தக்க கடமைகளைவிட்டு உரிமைகளை நாடிவர்ண தர்மத்தை அனேக காலமாகச் சீர்கேடான நிலைக்குக்கொண்டு

வர்கிருக்கிறார்கள். ஆகையால் வர்ணாசிரம தர்மத்தை இக்காலத்திய ஜனங்களின் மாறுபட்ட நிலைக்குத் தக்க வாறு சீர்திருத்தஞ்செய்ய வேண்டியதா யிருக்கிறது.

முதலாளிகளுக்குந் தொழிலாளிகளுக்குங் கூலி கள் விஷயமாயும், வேலை செய்யவேண்டிய நேரத்தைப் பற்றியும், தொழிலின் லாபத்தைப் பங்கிடுசெய்யும் விஷயத்தைப் பற்றியுஞ் சச்சரவுகளிருந்து கொண்டி ருக்கின்றன. மிலச்சுவான்தார்களுக்குங் குடியானவர் களுக்கும் அசமாதானங்க ளேற்பட்டு வருகின்றன. இவ்வித சீர்கேட்டினின்று அவர்களைச் சடுதியில் நல் லுறவுடனிருக்கச் செய்யாவிட்டால், உலகுக்கே பெருந் தீங்கு சனிக்குமென்ற அச்சத்திற்கிடமுண்டு.

இராஜ்ய விஷயத்தைப்பற்றிப் பேசினாலோ, அது மிக்க கொந்தளிப்பான நிலையிலிருக்கிறது. ஆட்சி யுடை யாருக்கும், ஆளப்பெறுகிறவருக்கும் அசமாதானமுங் கட்சிகளும் ஏற்பட்டிருக்கின்றன. அனேக விடங்களில் சச்சரவுகளுங் கலகங்களும் விளைகின்றன. இருவகை யினருக்குஞ் சமாதானமான ஒருவழி சரியா யேற்படா மல் குழப்பமே யிருந்து வருகின்றது.

இவ்வாறு எங்குப்பார்த்தாலும் உலகில் குழப்பமே இருக்கின்றது. இத்தகைய நிலைதான் ஒரு அவதாரத் திற்காவசியகமான நிலை. உலகில் எப்பொழுதெப்பொ ழுது இத்தகையநிலை யுண்டாகிறதோ அப்பொழு தப் பொழுதெல்லாம் ஒரு அவதாரம் ஏற்படவேண்டியதா யிருக்கிறதென்றது இதுவரையில் உலகில் நடந்துவந்த சரித்திரங்களின்படி உண்மையாகின்றது. இந்த அவ தாரமானது அம்சாவதாரமாகச் சொல்லப் பெறுகிறது.

குரு பரம்பரையிலுள்ள பெருந்தகையரொருவர் இச் சமயம் உலகில் அவதரிக்கிறார். இராமலிங்க சுவாமிகள் திருவருட்பாவில் இவ்வவதாரம் பறையறையப் பெற்றிருக்கின்றது.

"நானுரைக்கும் வார்த்தை யெலாம் நாயகன்றன் வார்த்தை
நம்புமினோ நமரங்காள்! நற்றருணமிதுவே
வானுரைத்த மணிமன்றில் நடம்புரி யெம்பெருமான்
வரவெதிர் கொண்டவனரு ளால் வரங்களெலாம் பெறவே
தேனுரைக்கு முளமினிக்க வெழுகின்றேனீவிர்
தெரிந்தடைந் தென்னுடனெழுமின்! சித்தி பெறலாகும்
ஏனுரைத்தே னிரக்கத்தா லெடுத் துரைத்தேன் கண்டீர்
யானடையுஞ் சுகத்தினை நீர்தானடைதல் குறித்தே."

"சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே யபிமானித் தலைகின்றவுலகீர்!
அலைந்தலைந்து வீணே நீரழிவதழகலவே
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த
நிருத்த மிடுந்தனித்தலைவரொருத்தரவர் தாமே
வீதியிலே யருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே."

—இராமலிங்க சுவாமிகள்.

அப்பெருந்தகையரானவர் தேவர்களுக்கும் மானிடருக்கும் குருவாயிருக்கிறார். இவ்வவதாரம் நிகழும் அல்லது நிகழாது என்ற வாதப்பிரதி வாதங்கட்செய்ய ஆவசியகம் இங்கு ஏற்படவில்லை. அவதாரம் ஏற்படுவது நிச்சயம் என்றதை ருசுப்படுத்துஞ் சூசனைகள் அனேகம் நமது ஆரியமத புராணங்களில் இருக்கின்றன. பௌத்த, கிருஸ்துவ, பாஹெய், மகமதிய முதலான மதங்களிலும் அவதாரம் நிகழும் விஷயம் நம்பப்

பெற்றிருக்கிறதுடன் மறைமறையப் பெற்றும் வருகிறது. இந்த அவதார புருஷன் சீவன் முக்தரான மகான்களனைவருக்குங் குருவான மகாத்மாவாயிருக்கிறார். குருக்களுக்குங் குருவானவர், குப்தலோகங்களின் அரசிறையில் ஞானோபதேச இலாகாவின் தலைவராயிருக்கின்றவர் இப்பொழுது அவதரிக்கப் போகிறார். அவரே ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வோர் தேசத்திலும் வெவ்வேறு பெயர்களுடன் அவதாரஞ்செய்த மகாத்மா. சில வேளைகளில் அவருடைய சீடர்களையும் அவதரிக்கும்படி செய்வது வழக்கம். இந்த ஜகத்குரு ஸ்தானத்தில் இப்பொழுது இருக்கின்றவருக்கு முன் இருந்தவர் கிருஷ்ண த்வைபாயன வேதவியாசர் என்ற மகாத்மா. அவர் முன் பல காலங்களில் பல அவதாரங்கள் எடுத்தார் என்று ஞானிகளால் வெளியாகிறது. முடிவில் அவர் புத்தாவதாரஞ்செய்து பிரஹ்ம நிர்வாணம் பெற்றார் என்று ஞானக்கண் பெற்றவர்கள் சொல்கிறார்கள். அதன் பின் ஜகத்குரு ஸ்தானத்தைப்பெற்று இப்பொழுது அந்த ஸ்தானத்தில் இருப்பவர் மைத்ரேய மாமுனிவர் என்று தெரிகிறது. இவர் ஜகத்குருவானதன் பின் இரண்டு தடவை உலகில் அவதரித்தனராம். இப்பொழுது அவர் அவதரிக்குங்கால் அவருடன் அனேக சீவன் முக்தரான மகான்களும் அவர்களுடைய சீடர்களும் அவதரிக்கிறார்கள் என்று தெரியவருகிறது. பராசரருக்குஞ் சத்தியாவதிக்கும் புத்திரரான வேதவியாசர், இருபத்து நாலு அவதாரங்களில் ஒரு அவதார புருஷன் என்றும், காலவேற்றுமைக்குத் தக்கவாறு வேதாகம புராணங்களை வகுக்கவேண்டியவதரித்தனரென்றும்; இந்தக் கலியுகத்தில் தர்ம மார்க்கத்தை

யும், ஆத்ம ஞானத்தையும் மனிதருக் குபதேசிக்கும்படியான உத்தியோகத்தை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவானவர் ஸ்ரீ மைத்ரேய மாமுனிவருக்கு எற்படுத்தி யிருக்கிறார் என்றும், மகா பாரதம், ஸ்ரீமத் பாகவதபுராணம், விஷ்ணுபுராணங்களை உற்றுநோக்கின் வெளியாகின்றது. மைத்ரேயர் மகாபாரத யுத்த காலத்தில் ஒரு முக்கியமான நிலையிலிருந்தார் என்றும்; ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, வைகுந்த மேகுஞ்சமயம் அவரிடமிருந்து யாதோ சில ஆக்ஞைகளைப்பெற்று இருடிகள் மத்தியில் ஒரு உன்னதபதவிலிருக்கிறார் என்றும்; விஷ்ணுபுராணத்தின்படி அவர் (மைத்ரேயர்) கலியுகத்தில் ஆத்மஞானத்தை உபதேசிப்பார் என்றும், மேற்சொன்ன இதிஹாஸ புராணங்களினின்று வெளியாகிறது. விஷ்ணுவின் ஒன்பதாவது அவதாரமென்ற புத்தர் தனக்குப்பின் மைத்ரேயர் புத்தராவரென்று சொன்னது இங்குக் கவனிக்கத்தக்கது.

மேற்கண்டபடி ஜகத்குரு அவதாரமாகின்ற இந்தக் காலம் உலகுக்கு எவ்வளவோ நற்காலம். ஜகத்குரு அவதாரத்தாலே, அச்சமயம் தூலதேகத்தை விட்டு சூக்குமாகி தேகங்களுடன் புவராதி லோகங்களிலிருக்கும் மனிதருங்கூட நன்மை பெறுகிறார்கள். தூலதேகத்துடனிருக்கும் நாம், அவர் நமதுமத்தியில் வருகின்ற இந்நற்சமயத்தில் நன்மையடைவோம் என்றது திண்ணம். அதற்குத் தக்கவாறு நம்மை நாம் தயாரித்துக்கொண்டால் மட்டும் நன்மை பெறசாத்தியமாகுமேயன்றி, தயாரித்துக்கொள்ளாவிடில், அவர் மத்தியில் நாமிருக்கின்ற நற்சமயம் பெற்றும், அது அவலமாய்ப் போகும். இந்த உபந்நியாச முழுதுமே, நம்மை நாம் எப்படி தயாரித்துக் கொள்வ

கென்ற விஷயத்தைப் பற்றினதே தான். ஆனாலும், இந்நூலின் இரண்டாவது மூன்றாவது, ஆறாவது அத்தியாயங்கள் முக்கியமாய் அவ்விஷயத்தைப்பற்றி விரித்துரைக்கின்றன வாதலின், அவைகளை மனனஞ் செய்து, மற்றுமுள்ள பெருநூல்களையும் படித்து மனனஞ்செய்து, நடையில் கொண்டு வரவேண்டும். அப்பொழுது ஜகத்குருவின் அவதாரத்தால் நமக்கு நன்மை அமோகமாக விளையும்.



## ஆருவது அத்தியாயம்.

### 1. முடிவுரை.

நம்மை நாம் தயாரித்துக்கொள்ளல்.



முன் அத்தியாயங்களில் நாம் யாவரும் இஷ்டமானல் மோக்ஷ மார்க்கிகளாக நிவிர்த்தி மார்க்கத்திற் செல்லலாமென்றும்; அதற்குத் தக்கச் சந்தர்ப்பங்களுஞ் சௌகரியங்களும் வாய்த்திருக்குமொரு தக்க சமயம் இஃது என்றும்; நாம் மார்க்கத்தில் செல்வதற்கு குருவை அடைய வேண்டுமென்றும்; குருவை அடைவதென்ருல் அது இன்னவிதமென்றும் ஒருவாறு பார்த்தோம். இந்த அத்தியாயத்தில் ஸத்குரு ஒருவரால் பரீக்ஷார்த்த சீடராய் அங்கீகரிக்கப் பெற வேண்டியதற்கு, நம்மை நாம் இன்னும் வேறெந்தெந்த விதங்களில் தயார் செய்துகொள்ள வேண்டுமென்றதைப் பார்ப்போம். நம் தேகம், மநம் சம்பந்தமாக நம்மையே நாம் தயாரித்துக் கொள்வது என்றும்; நம்மைச்சூழ்ந்த நெருங்கின சம்பந்தமுள்ள பிறரையும் உலகினரையுந் தயாராகச் செய்வது என்றும், இவ்விதம் இருவிதங்களில் நாம் தயார்செய்து கொள்ள வேண்டும்.

## 2. நூலாராய்ச்சி.

முதலாவதாக நம்மையே நாம் தயாரித்துக் கொள்வதெப்படி என்றதைப் பார்ப்போம். மூன்றாவது அத்தியாயத்தில் கண்ட சாதன சதுஷ்டய குணங்களைக் கட்டிக் கொள்வது இன்றியமையாதது. அத்துடன் பின்கண்ட சிலவிதப் பழக்கங்களும் முக்கியங்களாம்.

அவையாவன: தத்துவஞான நூலாராய்ச்சி, தியானம், விருத்திசோதனை என்ற மூன்றுமாம். நூலாராய்ச்சியாவது புத்தகங்களைப் படித்துணர்தல். பல புத்தகங்களைக் கற்று கல்வியாளனாக வேண்டுமென்ற ஆசையால் ஒரு புத்தகத்தையுஞ் சரியாகத் தெரிந்துகொள்ளாதிருக்கிற நிலையில் நூல்கள் பலவற்றைப்படிப்பதைவிட, ஒரு தத்துவ நூலை மட்டுமாவது ஆழ்ந்த சிந்தனையுடன் அதன் உட்கருத்தைப் பூரணமாய்த் தெரிந்துகொண்டிருக்கும் விதமாகக் கசடறக் கற்கவேண்டும். அநேக புத்தகங்களை மேலாழ்ந்தவாறு படித்தல் பிரயோசனமன்று. அதனால் அறிவு விருத்தியாகாது. பகவத்கீதை, உபநிடதம், புராணம் அல்லது பிரம்மஞான சபையின் நூல்களிலொன்று, என்ற இவற்றிலொன்றை ஒரு முகப்பட்ட மனதோடு படிக்க வேண்டும். படிக்கும்பொழுது, படிக்க பத்து நிமிஷம் வேண்டியதாயிருந்தால், படித்த பாகத்தை ஆழ்ந்த சிந்தனைக்கு இருபது நிமிஷமாவது கொடுக்க வேண்டும். படித்த பாகத்தின் உட்கருத்தை யுன்னிப் பார்த்து, நூலாசிரியரின் கருத்தை யுன்னி யுணர வேண்டும். அதுதான் உண்மையான படிப்பு என்பது. அவ்வாறு படித்தலைத் தற்கே பாராயணமென்று சொல்வது. இந்

நாளில் மற்ற விஷயங்களைப் போலவே பாராயணமென்றதும் குருட்டுத்தனமாகச் செய்யப் பெறுகிறது. அதாவது யாதாமொரு சாஸ்திர புஸ்தகத்தை ஸ்நானத்தின் பின்னர் எடுத்து வைத்துக்கொண்டு சுலோகங்களையோ பாசுரங்களையோ மேலாழ்ந்தவாறு குருட்டுப்பாடஞ் செய்து மநதைப் பல வழிகளிலுஞ் செல்லவிட்டுக் கொண்டே படிப்பது "வைதீகி" என்ற இக்காலத்திய ஒருவகை மநிதரின் பழக்கம். இதற்குப் பாராயணமென்று அவர்கள் சொல்வர். ஆனல் அது தவறு என்று மேற்சொன்னவற்ருல்வி ளங்கும். நிற்க, பிரதிதினமும் விடாமல் குறித்த காலத்தில் மேலே சொன்ன விதம் ஆழ்ந்த சிந்தனைகளுடன் புத்தகத்தைப் படித்து வரவேண்டும். அப்பழக்கத்தால் மநம் ஏகாக்கிரம் பெறும். பிரதிதினமும் படிக்கின்ற பாகத்தை அது வரையில் படித்த முந்திய நாட்களின் பாகங்களுடன் சேர்த்து மநநஞ் செய்து வரவேண்டும். அவ்வாறு படித்துணர்ந்த விஷயந்தான் நம்முடைய அறிவு எனத் தகும். நாமே ஆழ்ந்து யோசித்துக் கட்டிக்கொள்ளும் பொருள்தான் நம்முடைய தெனத்தகும். அவ்வாறன்றி பாஷியங்களைக் கற்று அவைகளைப்பேசி வந்தால், அது கிளிப்பிள்ளை பேசுவதை யொக்கும். ஏனெனில் பாஷியங்களில் உள்ள கருத்துகள் நம்முடைய மநந சக்தியால் ஏற்பட்டனவல்ல. அவை மற்ருெருவருடையவை, பிறர் சொத்து; நம்முடையனவன்று. அவ்வாறு ஆழ்ந்த சிந்தனையுடன் கூடிய நூலாராய்ச்சியினல் ஒருமுகமுறப் பழக்கப் பெற்ற மநமானது, தியானத்திற்குத் தயாராகின்றது. தியானத்தில் உட்காரும்பொழுது, மநம் சலனமற்று சமாதான நிலை

பெறுகின்றது. தவிரவும் உலக விவகாரத்தில் சம்பந்தமாகுங்கால் தெளிந்த அறிவானது நாலாராய்ச்சியால் உண்டாகின்றது. இவ்விஷயம் என் அநுபவமானது. பிரஹ்மஞான சபையில் சேருதற்கு முன்னமே, மற்றொருவர் இதைப்பற்றிச் சொல்லாமலே நானே மேற்கண்ட விதம் நாலாராய்ச்சி தியானங்களைப் பழகி மேற்கண்ட உண்மைகளைப் பெற்றேன். பின்னர் இச்சபையில் சேர்ந்து அந்த மத பெரியோர்கள் இதைப்பற்றி நான் கண்டறிந்த விதமே சொன்ன மாத்திரத்தில், எனக்கு உண்டான மனப்புளகாங்கிதத்திற் களவேஇல்லை. காமனைகளையுந் துவேஷங்களையுந் தூண்டக்கூடிய கட்டுக்கதைகளோ அநாவசிய நாவல்கள் முதலியவற்றைப்படிக்க வொண்ணாது. அதனால் மனச் சலனம்பெற்று, பலமுகப்பட்டுக் கலக்கமடைந்து கெகிடுன்றது.

## 3. தியானம்.

பிறகு, தியானமாவது, மனதை ஒரே லக்ஷியத்தில் லயமாகுமாறு செய்யும் மனப்பழக்கம். இதை எந்தக் காரணத்தினாலுந் தவறாமல் தினந்தோறும் பழக்கஞ் செய்யவேண்டும். ஒருநாள் விட்டு ஒருநாள் செய்வதால் நல்ல அபிவிருத்தியிராது. தியானஞ் செய்தற்கென்று பிரத்தியேகமானதோர் இடத்தை ஏற்படுத்தி வைத்துக் கொள்ளலே நலம். அதனால் அவ்விடத்தின் சூக்ஷும ஆகாயம் பரிசுத்தமாகி அவ்விடத்தில் தியானத்திற்காகச் சென்றவுடனே பிரயாசையின்றி மனம் குவியும். ஆகையால் அவ்விதஞ்செய்தல் நலமென்றாலும், சௌகரியமில்லாவிடின் தனியிடமொன்றில்லாததால் குறையொன்றுமில்லை. இன்னுஞ் சி

யாகச் சொல்லுமிடத்து, தனியிடந்தேடாமல் தனது மனோ வலுவைக்கொண்டு எந்தவிடத்திலும் தியானம் நிலைபெறச் செய்துகொள்ளலே மிகப்பிரயோசனமானது, உத்தமமுமானது. தியானத்திற்கென்று குறிக்கப்பெற்றதோர் காலம் முக்கியம். தியானத்தில் முதிர்ந்தவர்கள் எந்நிலையிலும், எக்காலத்திலும் தியானிகளா யிருப்பார்கள். ஆரம்பத்தில் பழகவேண்டிய நம்போலியருக்குக் குறித்த காலம் மிகப்பிரயோசனமானது. தியானத்திற்கு காலை சூரியோதயத்திற்கு ஒரு நாழிகை முந்தின நேரம் வெகு சௌகரியமானது. பிரஹ்ம முகூர்த்தம் அது. காலைநாலரை மணி முதல் அம்முகூர்த்த மிருந்தாலும்,உதயகாலம் அதிக தெய்வீக சக்தி நிறைந்த காலம். ஆகையால் அந்நேரத்தில் தியானஞ் செய்யத் தவறக்கூடாது. மத்தியானம் சூரியன் நம் சிரசின்நேர் உச்சமாவதன் அரைமணி நேரம் முன்னும் பின்னும் தியானத்திற் கனுகூலமான காலம். அதேவிதஞ் சூரியாஸ்தமன சமயமும், அதன்பின் அரைமணிநேரமும் தியானத்திற்குத் தக்க காலம். இரவில் 10-மணிக்குமேல் தியானம் செய்தல் தீங்கைத் தரும். அது பிசாசகாலம் அக்காலத்தில் ஸன்மார்க்க ஆசாரமுள்ளவர்கள் தியானஞ் செய்யார். அது நன்றாய்த் தூங்கவேண்டியகாலமேயல்லது, மநப்பழக்கத்திற்கு ஏற்ற காலமல்ல. தியானத்திற்கு உட்காருவதற்கு முன் தேகத்தை சுத்தி செய்துகொள்ளல் மிக நலமான காரியம். படுக்கையில் தூக்கம் நீங்கினவுடன் பகவத்தியானம் அல்லது ருஷிகளைப் பற்றி தியானஞ்சற்று செய்து சரேலென்று படுக்கையை விட்டெழுந்து மலஜல விஸர்ஜனஞ்செய்துகொண்டு, பல் துலக்கி, ஸர்வாங்க ஸ்நானஞ் செய்யவேண்டும். புண்

ரிய நதிகளில் ஸ்நானஞ்செய்தல் மிகு நலம். சௌகரியமில்லாவிடில் ஓடுகின்ற தெளிந்த நீரருவியில் ஸ்நானஞ்செய்தல் நலம். அதுவுஞ் சௌகரியமில்லாவிடில், சுத்தமான கிணற்று நீரில் ஸ்நானஞ்செய்தல் நலம். அதுவுஞ் சௌகரியமில்லாவிடில், தெளிந்த நீருள்ள தடாகம் நன்று. பட்டணங்களில் குழாய்த் தண்ணீரும், ஒன்றும் அசுப்படாத நிலையில் மிக நன்றே. ஸ்நானம் காலை 4½ அல்லது 5 மணிக்குள் செய்வது தான் உத்தமம். ஏனெனில் அக்காலத்தில் ஜலத்திலுள்ள சிறு கிருமிகள் நீரின் அடியில் அமிழ்ந்து கிடக்கின்றன. சூரிய உஷ்ணம் நீரில் தாக்கின அக்ஷணமே அவைகள் நீர்மேல் மிதக்கின்றன. அக்கிருமிகள் சம்பந்தமில்லா ஜலத்தில் ஸ்நானஞ்செய்து பல முறை ஆசமனமுஞ் செய்வதால், அதாவது தண்ணீரை உள்ளுக்கும் அருந்துவதால், சரீரம் பரிசுத்தமாகி எல்லாவித உஷ்ணங்களும் நீங்கி, மேக முதலிய கொடிய வியாதிகளுங்கூட சொஸ்தமாகி, ஆரோக்கியமடைகிறது. இவ்விதம் பிரதிதினமுந் தவறுமல் மட்டில் ஸ்நானமும், ஆசமனமுஞ்செய்து வந்தால் மேற்கண்டபடி வியாதிகள் சொஸ்தமாகின்றன வென்பதை அநேகர் அனுபவத்தில் கண்டிருக்கின்றனர். உதயகால ஸ்நானத்தால் இரத்த ஓட்டம் சரியாக ஏற்பட்டு. நரம்பு நாடிகளும் மூளையும் வலுவடைந்து, மூளைக்குத் தெளிவும் தேக சௌந்தரியமும் உண்டாகின்றது. ஆகையால் அவ்வித ஸர்வாங்க ஸ்நானஞ்செய்த பின் நல்ல சுத்தமான ஆடையணிந்து, அதன் பின் தியானத்திற்கு உட்கார வேண்டும். தியானத்திற்குச் சுகாசனமே நலம், எவ்விதம் உட்கார்ந்தால் தேகத்திற்குச் சிரமமிராதோ அதுவே சுகாசனம். முழங்

கால்களை மடக்கிச்சகசமா புட்காருவதைப் போன்றுட் கார்ந்து, முதுகெலும்பு வளையாமல் நேராக, நிமிர்ந்திருக்க கைகளை முழங்கால்களின் மேல் வைத்து கண்மூடியிருத் தல் பத்மாசனம். அதுவே சுகாசனம். இதையமத்தி யில் உள்ள தாமரை தளத்தில் ஆத்மா பிரகாசிக்கின்ற தாய்த் தியானிக்கலாம். அப்பொழுது கிதை, உபநிட தம், பிரஹ்ம சூத்திரம், காயத்ரி, தேவாரம், திருவாச கம், திருவாய்மொழி இன்னு மிவைபோன்ற ஆப்த வாக்கியங்களிலொன்றைமநதினுள் உச்சரித்துக்கருத்தை யுன்னி யுணரல் நலம். தத்துவமஸி, ஸோஹம், அஹம்ஸ:, என்ற மகா வாக்கியங்களை தியானித்து, உணர்வுபெற மநப்பழக்கம் செய்யலாம். தன்னிலும் வெளியில் யாவற்றிலும், உள்ளும்புறமுமாய் ஜகத் ஜோதி இருக்கின்றதாகத் தியானித்தலே மேற்சொன்ன வாக்கியங்களின் தியானம். அச்சோதியே தானெனவுணர்தலே உணர்வு. அதனால் இந்திரிய நிக்கிரகம் மநோ நிக்கிரகம், மநத்தூய்மை, இவையுண்டாகி முடி வில் தன்மயமாக சாத்தியமாகிறது. அந்த தியானத்தில் மூர்த்தி தியானமும் மிக நலமானது. ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன், புத்தர், மகாவிஷ்ணு, ருத்திரன், விக்னேசுவரன் என்ற ரூபங்களையோ, ருஷிக்களையோ, ஆசாரி யர்களையோ, ஏசுகிருஸ்து, மகமது நபி, ஜொராஸ்தர் முதலாயினோரையோ, மதத்திற்குத் தக்கவாறு மநதை ஆகர்ஷிக்கிற யாதாமொரு ரூபத்தைப்பற்றி தியானஞ் செய்தல் மிகு நலம். ரூபத்தியானத்திற்கு விஷயமா யிருக்கும் மூர்த்தி மகா ஸத்வமூர்த்தியென்றும், அவர் சந்நிதியில் ராகத்துவேஷ காமக்குரோதங்க ளில்லை யென்றும், அவரையடைதலே புருஷார்த்தமென்றுங்

கருதித் தன்னையுந் தன்னுடைய யாவையு மவருக்கே தத்தமாக அர்ப்பணஞ்செய்து, தான் அவருக்குப் பரதந்திரனென, மெய்மறந்திருத்தல் ரூபத்தியானத்தின் இலக்ஷணம். ரூபத்தியானத்தில் மூர்த்தியின் ரூபத்தை பாதமுதல் சிரசுவரையில் மனதால் செவ்வனே குரோமணித்து (அமைப்பித்து) அச்சொரூபத்தை இதயமத்தியில் பன்னிருதளங்களுடன் மலர்ந்துள்ள தாமரையில் நிறுத்தி தியானிக்க வேண்டும்; இவ்வாறு தியானஞ் செய்யு நோக்கிலுண்டாகின்ற உயர்தர மநோவிருத்தியானது நாம் உலகில் விவகரிக்கும் வேளையிலும் ஞானாராய்ச்சி செய்யும் வேளையிலும் அவைகட்கு வெகு உதவியாயிருக்கின்றதென்று என்சொந்த அநுபவத்தாலறிவேன்.

நெஞ்சகமே கோயினினைவே
சுகந்தமன்பே மஞ்சனநீர்
பூசை கொள்ளவாராய்ப் பராபரமே.

என்று தாயுமானவர் பாடியவண்ணம் அரூபத்தியானமோ. அல்லது ரூபத்தியானமோ, அல்லது இருவிதத்தியானமுமோ பிரதிதினமும் நமது வாழ்க்கையின் ஒரு பாகமாயமைய வேண்டும். ஒருநாழிகை நேரம் தியானஞ்செய்து வந்தாலே போதுமானது. தியானஞ் செய்கிறவர்கள் ஸத்வ ஆகாரமே உட்கொள்ள வேண்டும். மதுமாமிசங்களையும், அபின், கஞ்சா, புகையிலை போன்ற லாகிரி வஸ்துக்களையுங் கனவிலும், அருந்தக் கூடாது. அவ்விதம் தியானஞ்செய்ய ஆரம்பித்த கால முதல் இரண்டொரு மாதகாலத்திற்குள், அதன் முன்னிருந்ததைவிட நம்மிடம் எவ்வளவோ மேன்மைகள்

காணப்பெறும். நூலாராய்ச்சி விஷயத்திலுமிதேவிதஞ் சொல்லிநெக்கும்.

### 4. விருத்தி சோதனை.

பிறகு, விருத்தி சோதனை செய்வதாவது, நாம் பிரதிதினமும் நமது மனோ வாக்காயங்களின் விருத்தியை, அதாவது காரியங்களை மநச்சமாதானத்துடன் பக்ஷபாதமன்றி சோதித்த லென்பதே. பிரதிதினமும் குறித்த ஒரு காலத்தில் மநதை சமாதானமாய் வைத்து அன்று பூரா என்ன எண்ணங்கள், மனோசலனங்கள், வார்த்தைகள், காரியங்கள் தன்னால் கொள்ளப்பெற்றன வென்றும், அவைகளில் எவை எவை தீயனவுஞ் சுயநலம் பற்றினவுமா யிருந்தன வென்றும், எவை எவை நலமானவையும் பிறர் நலம்பற்றினவையுமாக இருந்தன வென்றும் சோதிக்கவேண்டும். மனோ விருத்திகள் எவை கர்வம், அகங்காரம், அசத்தியங்களைப் பற்றின ; எவை, அடக்கம், பொறுமை, சத்தியங்களைப் பற்றின என்று, மநதினின்ற தன்னை வேறுபடுத்தி பக்ஷபாதமற்று சோதனை செய்து, இனி கர்வம், அகங்காரம்; அசத்தியங்களுக்கு இடங்கொடுப்பதில்லை யென்றும் ; அடக்கம், பொறுமை, சத்தியங்களையே பற்றுவதென்றும், மநதில் உறுதிப்பாடு செய்துகொள்ள வேண்டும்.

மனோசலனங்கள் என்ற ஆசாபாசங்கள் சம்பந்தமான விருத்திகள் எவை காமனைகளாகவும், குரோதங்களாகவும். லோபங்களாகவு மிருந்தன ; எவை, அன்பு, பக்தி, பூததயைகளாகவும், சாந்தங்களாகவும், பொருளாசை யற்றனவாயு மிருந்தன என்று, சோதனைசெய்து

நலங்களைப்பற்றி தீங்குகளைக் களைந்திட உறுதியாகத் தீர்மானங் கொள்ளவேண்டும்.

வார்த்தைகள் எவை பொய்களாயும்; பெருக்கப் பேசப்பெற்றனவாயும், பிறருக்கு அமைதிப்பும், மானக் கேடுமுள்ளனவாயும், கோபம், காமங்களை யூட்டக்கூடிய னவாயுமிருந்தன; எவை மெய்களாயும், பிறருக்கு இத மானவையாயும், அறிவைத் தரத்தக்கனவாயும், தெய்வ பக்தி, தயை முதலிய மேலான மனோசலங்களை யூட்டக் கூடியனவாயுமிருந்தன, என்று சோதித்து, நலங்களையே பேசவும், தீங்கானவைகளை மறக்கவும் திட்டமாகத் தீர் மானஞ்செய்து கொள்ளவேண்டும்.

காரியங்கள் எவை எவை பிறருக்கு தீங்காயிருந் தன, எவை எவை நலமாயிருந்தன; எவை எவை சுய நலம் பற்றின, எவை எவை பிறர் நலம் பற்றின என் றதை சோதித்து நலமானவைகளையே பற்றவும், தீங் கானவைகளைக் கட்டுடன் செய்யாதொழிக்கவும் உறுதி செய்துகொள்ளவேண்டும்.

இவ்வாறு செய்கின்ற விருத்தி சோதனையால் மநம் தெளிவடையும், குற்றங் குறைகள் நமக்குள்ளிருப்பன வாவும் நமக்கே விளங்கும்; தியான காலத்தில் மநம் உயர்நல எழுச்சி பெறும்; உலக காரியங்களிற் சம்பந் திக்குங் காலையில் தெளிந்த அறிவும், மனோதிடமும் உண்டாகும்.

நூலாராய்ச்சி, தியானம், விருத்திசோதனை என்ற நற்பழக்கங்களோடு பிறர் யார் யாரிடம் உயர்நல விஷ யங்களாகின்ற அறிவு, ஞானம், பக்தி தயை, இன்னும் யோகம் முதலிய மேன்மைகள் காணப்படுமோ, அவர

வர்களை யெல்லாம், சாதி, மதம், வயது, முதலிய வித்தியாசங்களைக் கண்டு ஆலசியஞ் செய்யாமல், போற்றிவற்றுகின்ற சீலத்தை நாம் நம்மிடம் அமைப்பித்துக் கொள்ளவேண்டும்.

## 5. பிறரை தயாராகச் செய்தல்.

இப்பொழுது இரண்டாவதாக, பிறரைத் தயாராகச்செய்தல் எவ்விதமென்றதைப் பார்ப்போம். இவ்வுலகில் சாதாரண ஜனங்கள் மத்தியில்தான் நமக்கு வேலையிருக்கிறது. நம்போன்ற அம்மனிதருடன் சம்பந்தித்து வாழ்க்கை செய்து வருகிறதைவிட வேறான ஒரு தனி நிலை மோக்ஷமார்க்கத்திற் செல்வதற்குத் தேவை யில்லையென்று முன்னொரு அத்தியாயத்தில் பார்த்தோம். நாம் ஒவ்வொருவருமிருக்கின்ற நிலையிலேயே சுயநல நாட்ட மற்றுப் பிறர் நல மொன்றிலே மட்டுங் கண்ணுகி உலக நலங்களான காரியங்களில் நமது சக்தியானுசாரம் பல துறைகளிற் சம்பந்தித்து உழைக்கவேண்டும். பிரதி தினமும் நாம் பரோபகாரச் செயல்கட் செய்வதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்களுண்டு. உலகமெச்சும் யாதோ ஒரு காரியந்தான் பரோபகாரம் என்று எண்ணுவது பிசகு. பிரதிதினமும் சாமானிய காரியங்களில் நாம் பரோபகார சிந்தனையுடன் பிரவேசித்தால் மட்டுமே, ஒரு பெருங்காரியம் யாதாமொரு சமயத்தில் நேரிடும் பொழுது, அதைப் பற்றி நடத்தத் தக்க சக்தி நம்மிடம் அமையும்.

## 6. மத சம்பந்தமான கைங்கரியம்.

பரோபகார கைங்கரியங்கள் இப்பொழுது முக்கியமாய் நான்கு துறைகளில் நடைபெற வேண்டியனவாயிருக்கின்றன. அவையாவன: மதம், கல்வி, ஆசார சீர்திருத்தம், ராஜீய விஷயங்கள் என்பனவே. உலகில் எல்லாவித காரியங்களுக்கும் மதாசாரமே உயிர்பாகமாயிருக்கிறது. மதாசாரத்தைப் பற்றித்தான் மானிட வாழ்க்கையின் பலவித விருத்திகளிலும் ஐசுவரியங்களுண்டாகின்றன வென்றது நமது அநேக தேசியத் தலைவர்களின் அபிப்பிராயம். கோபால கிருஷ்ண கோகலேயும் ஸுரேந்திரநாத் பானர்ஜியும் மேற்கண்ட அபிப்பிராயத்தைப்பற்றின தலைவர்களில் இருவராவர். இப்பொழுது உலகிலுள்ள எல்லா மதங்களிலுமுள்ள ஸாராம்சத்தை, பாலினின்று வெண்ணெயைத் திரட்டுவதுபோல் திரட்டி உலகினரின் நிலைமைக்குத்தக்கவாறு நமது பிரஹ்மஞான சபையானது கொடுக்கின்றது. இச்சபையின் அங்கத்தினராயினோர் சபையின் கருத்துகளை உலகில் பரவச் செய்யவேண்டிய தங்கள் கடமையைச் செய்துவரின் அதுவே மதாசாரத்திற்கு உழைத்தலாகிறது. ஒரு கிராமத்தில், அல்லது பட்டினத்தில் ஒரு பிரஹ்மஞான கிளைச்சபை இருக்கிறதென்றால், அதனால் அவ்வூரிலுள்ள எல்லாவித மானிட விருத்திகளும் உயர் நலப்பயனைப் பெறவேண்டும். சுகாதாரம், கல்வி, போக்குவரவு சாதனம், கைத்தொழில் இவைபோன்றனவும் முன்னிருந்ததைவிட அதிக மேலான நிலைமைகளில் நடைபெறவேண்டும். கோயில் குளங்கள், தர்ம சத்திரங்கள் இவை போன்றனவும் மேம்படும் வழிகளில் நடத்தப்பெறவேண்டும். அத்தகைய காரியங்

களில் சுயநலமற்றுப் பிறர்நல நாட்டத்துடன் கிளைச்சங்கத்தார் பாடுபட்டு வரவேண்டும். மற்றும், கிளைச்சபைகள் குறித்த காலங்களில் தவறாமல் கூட்டங்கூடி தத்துவ நூலாராய்ச்சி செய்து வரவேண்டும். எல்லோருமில்லாவிடினும் இருவர் மூவராவது கூடவேண்டும். பிரதிதினமுங் கூடாவிடினும், வாரம் ஒருமுறை இருமுறையாவது கூடவேண்டும். அவ்வாறு கூட்டங்கூடுவது கேவலம் படிப்பை யுத்தேசித்ததாக மட்டுமிருக்க கூடாது. கேவலம் வாதப்பிரதிவாதமிடும் இடமாகக் கூட்டங்கூடுமிட மிருக்ககூடாது. கூடுகின்ற சகோதரர்கள் அதாவது அங்கத்தினர் ஒருவருக்கொருவர் மிக அன்புடையராயும், தத்துவ விசாரணையில் ஆவலுள்ளவர்களாயும், சிரத்தை பக்தியுள்ளவர்களாயு மிருக்க வேண்டும். ஊர்களில் ஒருவருக்கிருக்கக்கூடிய பலகாரணங்களாலுண்டான ஒற்றுமைக்குறைவான மனோபாவங்களுடன் அன்பற்ற எண்ணங்களுடன் கூட்டங்கூடல் முற்றும் பிசகானது. அங்கத்தினர் தங்களுக்குள் ஒற்றுமையும், நட்பும், பிரேமையும் உடைத்தாகி ஒருவரிடம் மற்றொருவர் பிராண சிநேகமா யிருக்க வேண்டும். அங்கத்தினர் தங்கள் ஊர் காரியங்களில் ஒருவருக்கொருவர் விரோதமுண்டாகும் படியாகவே நடந்துகொள்ளக்கூடாது. யாதாமொரு காரணத்தால் ஒருவருக்கொருவர் சற்று விரோதப்பட் டிருக்க ஏற்பட்டால் உடனே அவர்கள் பிரஹ்மஞான சபை அங்கத்தினர் என்றதை மறவாமல் சகோதர வாத்ஸல்ய முள்ளவராகித் தங்கள் விரோதத்திற்காதாரமா யிருந்த காரியங்களை ஒருவருக்கொருவர் விட்டுகொடுத்துச் சமரசஞ் செய்துகொண்டு, பழைய சகோதர வாத்ஸல்யத்தைப்

பதின் மடங்கதிகமாகப் பாராட்டி வரவேண்டும். கிளைச் சபைகளில் முக்கியமாய் பழைய அங்கத்தினராயும், அதிகம் தெரிந்தவராயும், அல்லது தலைமை ஸ்தானம் பெற்றவராயுமிருக்கிறவர் இவ்விஷயத்தில் ஜாக்கிறதை பெற்றிருக்கவேண்டும். அனேக இடங்களில் அத்தகைய அங்கத்தினரே தனது கிளைச்சபை அங்கத்தினர் சிலருடன் தங்களது குடும்ப காரியங்கட் சம்பந்தமாக விரோதம் பாராட்டிப் பேச்சுவார்த்தைகட்கூட ஒருவருக்கொருவ ரில்லாமலிருக்கிறார்கள். அவ்விதமிருந்தால் அந்த பிரஹ்மஞானக் கிளைச்சபை மீட்டிங்கிகள் கூடுவதுங் கூடாமையும் ஒன்றே; வித்தியாசமில்லை. எத்தனை பெரிய விரோதம்வரினும், கிளைச்சபையார் ஒருவருக்கொருவர் உடனே அவ்விரோதத்திற்குக் காரணமான காரியங்களை சீர்திருத்திக்கொண்டு ஒற்றுமையாகவேண்டும். அவ்விதம் ஒற்றுமையுடனும், பிராண சினேகத்துடனும், ஒரே வயிற்றில் பிறந்த சகோதர சகோதரிகளைவிட அதிக சகோதர வாத்ஸல்யத்துடனுங் கிளைச் சபையின் அங்கத்தினர் மீட்டிங்குக்கூடவேண்டும். அவ்விதங் கூடி விசாரணை செய்தால் மட்டுஞ் சில திட்டமான பலன்கள் விளைகின்றன. பலன்களாவன:—அங்கத்தினரின் மேலான மனோ நுகர்ச்சிகள், தத்துவ ஆராய்ச்சியாலுண்டாகிற தெய்வீக சங்கற்ப ரூபங்கள் முதலியன, ஊரிலுள்ள பிறரையும் தாக்கி அவர்களுக்குத் தெரியாமலே யவர்களை நல்வழிப்படுத்தி, அவர்களை அறிவாளிகளாயும், அன்புள்ளவர்களாயுமிருக்கச் செய்கின்றன. அவ்வித மன்றி மெம்பர்களுக்குள்ளே விரோத பாவனை யிருந்தியுடன் அதனால் அவ்வூரிலுள்ள பிறருங் கெடுகின்றனர். அந்த

கர்மபலன் சம்பந்தம்பட்ட அங்கத்தினர்களையும் விடாது. அங்கத்தினர் அன்பு பிரேமைகளுள்ளாரா கிக் கூட்டங் கூடுவதாலே மட்டும், தேவர்கள், மகருஷி கள் முதலோருடைய அநுக்கிரகம் அவ்விடத்திலுண் டாகிறது. எங்கு எங்கு படனம், பாடனம், சுருதங் கள் நடை பெறுகின்றனவோ அங்கங்கெல்லாம், தேவர் கள், ருஷிகள், கருடகாந்தர்வர், பன்னகர், கிம்புருஷர், வித்யாதரர், புண்ணிய தீரங்கள், க்ஷேத்ரங்கள் வாசஞ் செய்யுமென்று சாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்வ தைப் பற்றி சொல்லியிருப்பதெல்லாம் பிரஹ்மஞான சபை மீட்டிங்குகளில் தவறாமல் நிகழ்கின்றனவென்பது அப்பொழுதுதான் உண்மையாகும். அப்படி சரியான நிலையில் கூட்டங் கூடுமிடத்தில் நிச்சயமாகவே மேற் சொன்ன தெய்வீக சம்பவங்களுண்டாகின்றன வென் றதை நம்மிலனேகர் கண்டுளர்.

நமது கிளைச்சபையோர் உள்ளூர் வெளியூர்களிற் சென்று பிரஹ்மஞானக்கருத்துகளைப்பிரசங்கங்கள் மூல மாகப் பரவச் செய்யவேண்டும். ஒவ்வொரு மெம்ப ரும் இதில் கண்ணுடையராயிருக்கவேண்டும். புஸ்த கங்களை அச்சிட்டு வெளியிட்டு அதனாலும் உண்மைக ளைப் பரவச் செய்யவேண்டும். யக்ஞங்க ளெல்லாவற்றி னும் ஞானயக்ஞமே மேலானதென்ற கீதாசாரியன் வாக் கின்படி, நாம் ஒவ்வொருவரும் மேற்கண்ட வழியில் சக்தியானுசாரம் பாடுபடவேண்டும்.

## 7. கல்வி கற்பிக்குங் கைங்கரியம்.

இது இப்படியாக, கல்விக்காக பாடுபடல் ஒரு மிக முக்கியமான பொதுநல கைங்கரியமாகிறது. தற்

காலம் கல்வியானது மூளை யறிவைப் பற்றினதாக மட்டுங் கொண்டாடப் பெறுகிறது. அதுவும் பிள்ளைகளின் மனோவிகாசத் தன்மைக்குத் தக்கவாறு அமையவில்லை. பிள்ளைகள் எந்த எந்த விதமான ஆராய்ச்சியில் இயற்கையில் பற்றுள்ளவர்களா யிருக்கிறார்களென்று கண்டு அதற்குத் தக்கவாறு பாடங்களை யமைத்து மூளை அறிவைச் சரியான வழியில் வளரச் செய்யக்கூடிய வண்ணம் இக்கால கல்வி அமைவில்லை. என்றாலும் தேசியக் கல்வி சங்க மூலமாய் உண்டாகிக்கொண்டுவரும் பள்ளிக்கூடங்களில் இவ்விஷயம் மிகவும் கவனிக்கப்பெற்று வருகிறது. கல்வி இலாகாவும் ஜனங்களுக்கு உத்திரவாதமுள்ளதாயாகிறபடியால் இனி ஸர்க்கார் சம்பந்தமான பள்ளிக்கூடங்களிலும் இது கவனிக்கப் பெறும். மநிதன் என்றால், ஆத்மா, மநத்தத்துவம், இச்சா தத்துவம், தூல தத்துவம் என்ற நால்வகைத் தன்மையன், என்பது விளங்கும். இந்நான்குஞ் சரியான வழியில் அவனிடம் வளர்ந்து ஓங்கும்படி செய்தலே கல்வி கற்பிப்பதன் இலக்ஷணமா யிருக்கவேண்டும். ஜீவன் ஈசுவரன் என்ற விசாரணைக்கான மத சம்பந்தமான போதனைகட் செய்வதால் ஆத்ம தத்துவமும்; கணிதம், சரித்திரம், பூகோளம், தூலதேக உருபுகளையும் ரசாயனங்களையும் பற்றின புலனறிவு சாஸ்திரம், இலக்கண இலக்கியங்கள் முதலியவைகளைப் போதனை செய்வதால் மநத் தத்துவமும்; உபாத்யாயர்களின் ஒழுக்கம், அவர்களுக்குப் பிள்ளைகளிடமுள்ள பிரேமை, நட்பு, இவ்விதப்பழக்கத்தால் பிள்ளைகளிடம் ஈசுவர பக்தி, பூததயை முதலான சுத்தமான மன எழுச்சிகளையுண்டாக்குவதால் அவர்களின் இச்சாதத் துவமும்; வெட்ட

வெளியான இடங்களில் பந்து முதலிய விளையாட்டுகள், பலவித தேகப்பயிற்சிகள் இவைகளால் தூலதத்துவமும், முறையே கட்டுப் பட்டு, வளர்ந்து செழிக்கின்றன. அவ் வழிகளில் தேசீய கல்வி சங்கத்து ஆளுகையின் கீழு ள்ள பள்ளிக்கூடங்களில் கல்வி கற்பிக்கப்பெறுகின்றன. தவிறவும், அப்பள்ளிகளில் கைத்தொழில்களும் விவ சாயமும் செவ்வனே கற்பிக்கப்பெற்று வருகின்றன. இத னல் மூளையறிவு பிள்ளைகளின் தன்மைக்குத் தக்கவாறு வளர்கின்றது. சாரணர் சங்க மூலமாகப் பிள்ளைகளைக் கசரத்துகட் செய்யவும், விளையாடவுஞ்செய்து, கைத் தொழில், சமையல் வேலை, ஆபத்தில் காற்பது, வைத் தியம் முதலிய விஷயங்களிலும் அவர்களைத் தேர்ந் திடச் செய்வதாலே, அவர்கள் உயர்நல குணதிசயங்கட் பெற்றவர்களாயும், திடகாத்திரமுள்ளவராயு மாகிறார் கள். சாரணர் காரியத்தால் தூலதத்துவமும் இச்சா தத்துவமும் நலம் பெறுகின்றன. கல்வியானது இவ்வித வழிகளில் கொடுபடவேண்டும். நமது தேயத்தில் ஆண் பிள்ளைகளின் படிப்பானது ஏனைய இதர தேயங்களி லிருப்பதை விட மிகக்குறைவா யிருக்கிறது. சர்க்காரு டன் சேர்ந்து பள்ளிக்கூடங்களை அதிகப்படுத்தி, கட் டாய கல்வி சட்டங்களையும் ஏற்படுத்தி, இனும் படிப்பு சொல்லிக்கொடுக்கவும் பாடுபட்டு வருவோமேயானல், படிப்பை எல்லோருக்குங் கொடுக்கும்படி செய்ய சாத் தியமாகும். சர்க்கார் பள்ளிகளிலும் மேல்கண்ட விதமாக பாடங்களை அமைக்கப் பிரயாசை யெடுக்க வேண்டும். கல்வி ஆண்பிள்ளைகளுக் கெவ்வாறோ அவ்வாறே பெண் பிள்ளைகளுக்கு மின்றியமையாதது. மேலே விபரஞ் சொல்லப்பெற்ற வழிகளில் பெண்பிள்ளைகளுக்கும் பாட

சாலைகளில் பாடம் அமைக்கப்பெற வேண்டும். ஆண் பிள்ளைகளை மட்டும் படிக்கவைப்பதில் பிரயோசன மில்லை. பெண்பிள்ளைகளின் படிப்பு நம் தேயத்தில் இல்லையென்றே சொல்லத்தக்க அவ்வளவு குறைவா யிருக்கிறது. அது நம் தேசம் க்ஷீணித்ததற்கு முக்கிய காரணங்களில் ஒன்று. ஆகையால் பெண் கல்வியை வள ரச்செய்ய வேண்டும். அநேகம் பேதையர், பெண் களுக்குக் கல்வி கொடுப்பது பிசகென்றும், அதனால் அவர்கள் தீயமார்க்கங்களிற் செல்வார்களென்றும் சொல் கிறார்களென்று எனக்குத்தெரியும். அவர்களின் முட் டாள் தனம் அவர்களின் வாசகத்தினிடமே விளங்க வில்லையா? படிப்பானது தீயமார்க்கங்களிற் செல்லவிடு கிறதென்ற எண்ணம் அவர்களிடமிருக்கிறதாக வாசகத் திற்குப் பொருளமைகிறதல்லவா? அப்படியானால், அக் கொள்கையுடையவரும் படித்தவரேயானதால், அவர் தானுந் தீயரே என்றுதன்னையே அவமதிப்புக்குள் ளாக்கிக் கொண்டதாயாகிறது. இதையறியாமல் பிதற்று கிறவர் வார்த்தையே சபைக்கேற்ற வார்த்தையல்லவாத லின், அதனைப்பொருட் படுத்தாது தள்ளிவிடுவோம். உண்மையைப் பேசுமிடத்து, படிப்பினால் கெட்டவர் களே இல்லை. படிப்பில்லாதவர்களில் கெட்டவர்களைவிட, படித்தவர்களில் கெட்டவர்கள் சொற்பம். அவ்விதம் கெட்டவர்கள் படிப்பில்லாதிருந்தால், இன்னும் எத் தனையோ மடங்கதிகமாகக் கெட்டிருப்பார்கள். அவ் வளவு தீய வழிகளிற் செல்லத்தக்க இயற்கை வாசனை யுள்ளோர் மட்டுமே படித்துங்கெட்டவர் என்ற பெயர் எடுக்கின்றனர். இவ்விஷயம் ஆண்பாலர் சம்பந்தப் பட்ட மட்டில் சொல்லப்பெற்றதாயினும், பெண்பாலர்

விஷயத்திலும் அஃதே ஒக்கும். உண்மையில் படிப்பி ஞல் கெட்டவர்கள் ளெந்நாளிலுமில்லை. பெண்கல்வி இல்லாதது எவ்வளவோ அக்கிரமங்களுக்குக் காரண மாகிறது. பெண்பாலர் கல்லா மூடராயிருப்பதால் எத்தனையோ தீங்குகட்குக் காரணமா யிருக்கின்றனர்.

நல்லார்கட்பட்ட வறுமையினின்னதே
கல்லார் கட்பட்டதிரு. (குறள்)

ஆகையால் வீடுகளில் உள்ள ஸ்திரீகளுக்குங் கல்வி கற் பிக்கவேண்டும். பெண் குழந்தைகளுக்குங் கல்வி கற் பிக்கவேண்டும். பெண்பாலர் கல்வியில்லாதவர்களாயிருத் தலால் ஆண்பாலருக்குக் கிரஹஸ்தாசிரமத்தில் எத் தனையோ சங்கடங்கள் விளைகின்றன. குடும்பங்களில் ஸ்திரீ புருஷர்களுக்கு ஒற்றுமைக் குறைவும், சச்சரவு களும் விளைந்து இன்பமில்லாமற் போகிறது. மானிட வர்க்கத்திலே ஆண் பெண்பாலர் சமமான நிலையினர், இருபாதி அம்சங்களானவர். ஒரு பாதி அம்சமான பெண்பாலர் அறிவிலாராயிருக்க, மற்றப் பாதி அம்ச மான ஆண்பாலருக்குச் சுகக்ஷேமங்களெங்ஙனஞ் சனிக்கும்? கொஞ்சமாவது அறிவைப்பெற்றவர் பெண் கல்விக்காக உடல் பொருளாவியை தத்தஞ்செய்யத் துணியாம லிருக்கமாட்டார்கள். மாதமும்மாரியுடன் நாடுகளில் பறவைகளும், நாற்கால் பிராணிகளும், மநிதரும் பய மில்லாமல் நல்லுறவுடன் கொஞ்சிக் குலாவித் திரிந்த முன்னொரு காலத்தில் அயோத்தியாபுரியில் மனுநீதி தவறாமல் செங்கோல் செலுத்திவந்த சக்கிரவர்த்தியான ஸ்ரீ இராமபிரான் இராஜரீகஞ் செய்கையில், அவரது இராஜ்யத்தில் கல்லாதவர்களே இருந்தனரில்லையென்று வால் மீகி இராமாயணம் கூறுகின்றது. கற்றறிந்த

பெண்மணிகள் கணக்கிலகப்படாதிருந்த காலம் பூர்வ காலம். அந்நாளைப்போன்ற நன்னாளை யிந்நாளுடாக நாம் யாவரும் ஊக்கமது கைவிடாம லுழைக்க எம்மிறை யருள்வராக! கல்வி கற்பிக்குங் கைங்கரியத்தில் நமது இளைய சகோதரர்களாகிற பஞ்சமர்களின் கல்வி ஒரு முக்கியாம்சமா யிருக்கிறது. சேரிகளில் பள்ளிக்கூடங்களை ஸ்தாபித்து பஞ்சமப் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொடுக்கவேண்டிய சௌகரியங்களைச் செய்யவேண்டும். மேலோர் என்று வீண்பெருமை பாராட்டும் நாம் கீழோரை, பஞ்சமரை, மேன்மையான ஆசரணைக்கான கல்வி கற்கும்படி செய்யாவிடின், நம்மை நம்மினும் மேலோரான ஞான தேசிகர் கவனிக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்க்க எங்ஙனம் கூடும்? மேலோரின் கடமையானது கீழோருக்கு தவியாகி அவரை ஏற்றமுறச் செய்தலே. அதை நாம் மறவாமல் பஞ்சமர் கல்விக்குப் பாடுபட வேண்டும்.

## 8. ஆசார சீர் திருத்தம்.

இனிது இவ்வாறிருக்க, பொதுநல கைங்கரியத்தில் மற்றொரு துறை யுண்டு. அது ஆசார சீர்திருத்தம், என்றது. ஆசார சீர்திருத்தம் என்றதைச் சிலர், உண்பதும், குடிப்பதும், இன்னும் மனம்போன போக்கெல்லாம் போவதுமாக அனுஷ்டிக்கின்றனர். உயர்வு, தாழ்வு என்பதே யில்லாமல் யாவருஞ் சமமாக வேண்டுமென்று சிலர் வாதிடுவர். இது சகஜ நடையே யன்று. உலக வியற்கைக்கே விரோதமான கொள்கை. இவர்கள் ஈசுவரனின் அறிவையும் மிகுந்த அறிவுடையார் போலும். ஈசுவரனின் சிருஷ்டியிலே உயர்வு, தாழ்வு,

சமம் என்ற மூன்று வேறுபட்ட நிலைகள் சாசுவதமானவை. சமநிலை மட்டுந்தானிருக்கிறதென்று ஒருவரும் சொல்ல முடியாது. அறிவாளர் அறிவிலியாரினும் மிக்கர். அறிவிலியர் அறிவாளரினுந் தாழோர். இந்த வித்தியாஸம் எப்பொழுதுமுண்டு. அறிவாளரும் அறிவிலியாருஞ் சமத்துவமாதல், இயற்கையிலே முடியாது. பூர்வம் அறிவைத் தழுவியே உலக வாழ்க்கையின் விருத்திகள் நிர்மாணிக்கப் பெற்றிருந்தன. அதாவது குணத்துக்குத் தக்க கர்மம் அல்லது தொழில் மநிதருக்கு ஏற்பட்டது. அந்த குணத்திற்குந் தொழிலுக்குமே ஒரு வகை வர்ணம் அல்லது சாதி என்ற பெயர் பூர்வம் இருந்தது. இப்பொழுது சில ஆயிர வருஷங்களாக குண கர்மத்திற்கும் வர்ணம் அல்லது சாதி என்றதற்கும் வித்தியாஸம் ஏற்பட்டு ஒன்றுக்கொன்று கொஞ்சமேனும் பொருத்தமில்லாமற் போய்விட்டது. இந்த நிலையில் பூர்வம் இருந்ததைப் போன்றே குணகர்மங்களைத் தழுவி மீண்டுஞ் சாதி நிர்ணயஞ் செய்து திருத்தஞ் செய்யவேண்டுமேயல்லது, அதைவிட்டு எல்லோரும் சமத்துவமாகவேண்டுமென்றால், தீங்கான நிலையே யுண்டாகும். ஆசார சீர்திருத்தமானது ஞானத்தைத் தழுவி நடைபெறவேண்டும். ஈசுவர, ஆசாரிய பக்தி, பூததயை, சிநேகத் தன்மை என்ற குணங்களமைந்தோரால் அஃது நடத்தப் பெறவேண்டும். ஆசார சீர்திருத்தத்திற்கு மற்ற எல்லா விஷயங்களுக்கு முள்ளதைப் போன்றே, ஆத்மஞான சரணையாகிற மதம் ஆணிவேராயிருக்கிறது. ஆகையால் ஆத்மஞான விசாரணையிலுள்ளோர் மட்டுமே அதை சரியான வழியில் நடத்தவல்லோர். ஸ்திரீ, புருஷர் என்றபால் வேற்றுமையால்

மானிடர் ஒருவர்க்கொருவர் மேலோர், கீழோர் என்று இப்பொழுது அனுஷ்டானத்தில் உள்ளதும் தவறான விஷயம். ஞானத்தை, குணத்தை ஒழுக்கத்தைப் பற்றியே ஒருவர் மேலென்பதும் அல்லது கீழென்பதும் நிர்மாணிக்கப் பெறவேண்டும். இப்பொழுது முதலாளிகள் தொழிலாளிகள் என்பவருக்கு அசமாதானம் இருக்கிறது. ஆசார சீர்திருத்தக்காரர் இதையும் செவ்வைப் படுத்தவேண்டும். தொழிலாளிகளுக்கு லாபத்திலும் பங்கு வைக்கவேண்டும். அல்லது கூலியை சம்பளத்தை உயர்த்த வேண்டும். பங்கு கொடுப்பதாயினுஞ் சரி. சம்பளமுயர்த்துவதாயினுஞ் சரி, தொழிலாளிகளின் பெண்டாட்டிகள், பிள்ளைகளுக்கும், அவர்களுக்கும் எக்காலிலும் உண்ணவும் உடுக்கவும், வைத்தியம் முதலிய செலவுகளுக்கும் மனோற்சாகமாய் விடுமுறை தினங்களிலிருப்பதற்கும் போதுமான வருமானமிருக்கத் தக்கதாகத் திருத்தஞ் செய்யவேண்டும். தொழிலாளிகள் மேற்கண்ட ஆவசியகங்களைப் பெற்ற பின்னரும் இன்னும் அதிகமாகச் சம்பாதித்துப் பணத்தை மிகுதியாக வைத்துக்கொள்ள வேண்டுமென்ற பேராசையால் மேற்சொன்ன நியாயத்தை மீறி அதிகமாகக் கேட்டால் அதற்கு இடந்தர வேண்டியதில்லை. தாழ்ந்தோரை உயர்த்துவதுதான் உயர்ந்தோரின் இலக்ஷணம். அதற்கென்றேதான் உயர்ந்தோர் பிறந்துளர். அப்பிறப்பின் கடமையைச் செய்யாவிட்டால் உயர்ந்தோர் தாழோராக வேண்டியவரே. பஞ்சமர் என்றவர்கள் கீழான நிலைமையில் துராசாரங்களுடனிருக்கிறார்கள். அவர்களை சதாசார முன்னோராக்குவதும், சதா சாரிகளா யிருக்கின்றவர்களையும்

நாம் உயர்வான நிலையில் மதித்து நடத்துவதும் நமது கடமை. கள் சாராயங் குடிப்பதை விடும்படியும் செத்த மாடு வகைராக்களைப் புசிக்காமலிருக்கும்படியும், அனுதினமும் அவர்களின் வேலை கலைந்தபின்னர் சுத்தமான நீரில் ஸ்நானஞ் செய்து விபூதி திருநாம தாரணம் செய்யும்படியும், சற்றேனும் ராம, கிருஷ்ண, சிவரூபமான கடவுளைத் தொழும்படியும் அவர்களுக்கு நன்மதி பூட்டி, அவர்களில் யார் அவ்விதஞ் செய்கிறார்களோ அவர்களை ஸ்பர்ச யோக்கிய முள்ளவர்களாக நடத்தி வரவேண்டும். இது ஈசுவர சம்மதமான காரியம். சாஸ்திரோக்தமானது. திவ்ய சரித்திரங்களாலும் நிச்சயிக்கப்பெற்ற விஷயம். ஆழ்வார் நாயன்மார்களில் இச்சாதியிற் பிறந்தவருண்டு. பாணாழ்வார் பஞ்சமசாதியாரே. திருவள்ளுவர் மற்றொரு உதாரணம். நந்தனார் பஞ்சமசாதியிற்பிறந்த ஞானி. இவ்விதம் அனேகருண்டு. இப்பொழுது சிதம்பரத்தில் நந்தனார் மடாலயம் என்றவிடத்தில் பஞ்சமர் சதாசார சீலங்களுடையராகத் திருந்தத்தக்க முயற்சிகளைச் செய்து வருகிறார்களென்ற விஷயம் மிகவும் மெச்சத்தக்கது. அவர்களில் சிலர் மாமிசத்தை விட்டு, குடிப்பதை நீக்கி, சாகபக்ஷணிகளாகி, பிரதி தினமும் உஷக்கால ஸ்நானஞ் செய்து, தெய்வந் தொழுது உண்கிறார்கள்; உண்டபின் பள்ளிக்கூட கைங்கரியத்திற்காக அலைந்து திரிந்து உழைக்கிறார்கள். இத்தகைய ஸதாசார சீலங்களுடையவர்களைத் தீண்டி அவர்களுக்குச் சமாசனமுங் கொடுத்து நாம் அவர்களுடன் ஏன் பழகக் கூடாது? அசூயையும் பொறாமையு முடையவர்தான் பழகார்கள்.

## 9. ஐக்கிய சங்கம்.

நிற்க, ஆசார சீர்திருத்த முறைக்கு மட்டுமென்றல்லாமற் பின்னை மற்றுமுள எல்லாப் பொதுநலத் துறைகளுக்கும் அநுகூலமா யிருக்குமோர் துறையானது ஐக்கிய சங்கம், என்றது. ஐக்கிய சங்கத்திற்காக நாம் யாவரும் பாடுபடவேண்டும். அது ஐக்கிய நாணயச் சங்கமென்றும், ஐக்கிய விவசாயச்சங்கமென்றும், கைத்தொழில் சங்கமென்றும் இவைபோன்ற அநேக பெயர்களுடன் நடைபெறுகிறது. அதன் ஒவ்வொரு பாகமும் தேசத்திற்கு மிகுந்த நலமானது. இகசாதக மத்தனையும் அதனாலே விளையுமெனலாம். இந்த ஐக்கிய சங்கத்தாலே ஜனங்களிடம் தற்பயிற்சி, சுய ஆட்சி, சுயஉதவி, சிக்கனம், ஒற்றுமை, நாணயம் என்ற குணங்கள் அமைகின்றன. அதனால் இகபரசாதக முண்டாகிறது. ஆகையால் ஐக்கிய சங்கங்களை ஸ்தாபித்து ஐக்கிய சங்கங்களின் கருத்துகளைப் பரவச்செய்வது நமது கடமை.

## 10. இராஜ்ய சீர்திருத்தம்.

இப்பொழுது, இராஜ்ய விஷயங்களாவன: இராஜாங்க முறையைப்பற்றின சீர்திருத்தங்களெனப்பெறும். இராஜாங்கமென்பது ஜனங்களடர்ந்த தேயத்தின் நீதி முறை. இராஜாங்கத்திற்கு ஜனங்களே ஆதாரம். "குடி உயர முடி உயரும்," என்ற பழமொழிப்படி ஜனங்களில்லாவிடில், அல்லது ஜனங்கள் க்ஷாமநிலை பெற்றிருப்பின், இராஜாங்கம் க்ஷீணிக்கும். அரசன் இராஜாங்க முறையைக் கற்றுணர்ந்து, அதன்கணுள்ள குணதோஷங்களைக் கண்டுபிடித்து, குணங்களானவைகளைப் பற்றி விருத்தி செய்யவும், தோஷங்களானவைகளை விலக்கி

யழிக்கவும் பாடுபடவேண்டும். இன்றேல் அரசனுக்கு விளைவது தீங்கேயாம்.

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப்படும். (குறள்)

அல்லற்பட்டாற்று தழுதகண்ணீர்
அன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை. (குறள்.)

இறைகாக்கும் வையகமெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச்செயின். (குறள்.)

நீதிநெறி தவறாமல், செங்கோல் செலுத்தும் அரசனை நீதியே காக்கின்றது. அரசன், அதாவது இராஜ நீதி, அல்லது இராஜாங்கம், இருந்தால் தான் ஜனங்களுக்கு க்ஷேமம். அரசன் அல்லது இராஜாங்கமில்லாவிடில் நாடு பாழாகும். ஆகையால் அரசிறை செலுத்துவோருக்கு இராஜநீதிகளைக் கொண்டு செலுத்தவேண்டிய முறைகளை ஜனங்களின் சௌகரிய அசௌகரியங்களுக்குத்தக்கவாறு ஜனங்களுக்கு அநுகூலமாயும் அரசிறைக்குத் தீங்கன்றியும் எடுத்துரைத்து, இராஜீய விஷயங்கள் திருத்தமாக நடைபெறும் விதமாகப்பாடுபட வேண்டும். இதில் உழைக்க வேண்டியவர்கள் தெய்வபக்தி, இராஜபக்தி, தேசபக்தி யுள்ளவர்களாயும், இராஜீய விஷயங்களைப்பற்றி நன்றாய் ஆராய்ந்து தெரிந்துகொண்ட விவேகிகளாயு மிருக்கவேண்டும். தலைப்பாகையுள்ள தலையை யசைக்குந்தெய்வங்களாயிருக்க வொண்ணாது. நமது தாய் நாடாகிற இவ்வாரிய வர்த்த புண்ணிய பூமியானது இப்பொழுது சுயேச்சையற்ற நிலையிலிருக்கிறது. அதாவது ஜனங்களுக்கு இந்திய இராஜாங்க விஷயத்தில் சுதந்திரம் இருக்கவேண்டிய அளவில்லை. ஓரோர் தேசத்தினருக்கும் அவ ரவர் தேசத்

தின் இராஜாங்க முறையில் பூரா சுதந்திரமிருக்கிறது. இது மநிதருக்குச் சன்ம சுதந்திரமான விஷயம். இராஜாங்க விஷயத்தை நிர்வகித்து நடத்துகிறவர்கள் ஜனங்களுக்கு மேன்மேலும் உத்திரவாதமுள்ளவர்களா யிருக்கச் செய்ய நாம் பாடுபடவேண்டும். இதற்காகச் சட்டசபைகளிருக்கின்றன. அவைகளில் சேர்ந்து உழைக்க முன்வரவேண்டும். சர்க்காருடன் ஒற்று உழைத்து, சர்க்காரை ஜனங்களின் சௌகரியப்படி நடக்கச்செய்ய பாடுபட வேண்டும். சர்க்காரை எதிர்த்து ஒற்றுழையாமை மூலமாக உபத்திரவிக்க எண்ணுவது எந்நாளிலும் பிசகு. அதனால் ஜனங்களுக்குவிளையுந் துன்பங்கள் அநேகம். ஜனங்களின் க்ஷேமத்திற்கும், ரக்ஷகத்திற்கும் அரசன் முக்கியமா யிருக்கவேண்டும். அரசனில்லா நாடு பிணக்காடே. ஆகையால் இராஜாங்கத்தைக் குலைக்கும் வழியானது எப்பொழுதும் தீங்கான வழி. இராஜாங்கத்தோடு ஒத்துழைத்து சீர்திருத்தஞ்செய்துகொள்ளலே உத்தமம். அவ்விதம் ஒத்துழைத்தலாலே சீர்திருத்தங்களை வெகு சுலபமாகச் செய்துகொள்ளக் கூடிய நிலைமையில் இந்திய இராஜாங்க முறையுமிருக்கின்றது. ருஷியாவைப்போன்று பழைய இராஜாங்கத்தைக் குலைத்துப்புதிய இராஜாங்கமொன்றை ஏற்படுத்திக்கொள்ளும் நிலைமை இந்திய இராஜீய முறைக்கு ஒரு நாளும் வராது. இப்பொழுது நமது மன்னனயிருக்கின்ற ஐந்தாம் ஜியார்ஜ் சக்கிரவர்த்தியானவர், புவியிலுள்ள மகுட மன்னர் யாவரினும் மேன்மையானவர் என்று சரித்திரம் விளங்கச்செய்கிறது. இந்தியாவும், இங்கிலாந்தும் சகோதரிகளாக ஒத்து இராஜ்ய பாரம் செய்தால் மட்டும் உலகில் உயர்வற வுயர்நல நாகரீகம் அமைய ஏதுவாகும்.

இன்றேல், சச்சரவுண்டானால், இங்கிலாந்து மட்டுக்கு மென்றிமல், இந்தியாவுக்கும்கூட தீங்கே விளையுமென்க. இங்கிலாந்தை விடுமானால், இந்தியாவுக்குப் பிறகு இராஜீயவிஷயங்களிற் சுதந்திரமே இல்லாமற் போமென்று அஞ்சுவதற்குப்போதுமான இடமிருக்கிறது. ஆகையால் நாம் நமது இந்திய இராஜாங்கத்தோடு ஒத்துழைத்து சீர்திருத்தங்களைச் செய்துகொள்ள பாடுபடவேண்டும். இராஜீய விஷயங்களில், மற்றெல்லா விஷயங்களிலும் போன்றே, ஸ்திரீகள் தங்கள் நுண்ணறிவையுந் திறனையுங்காட்டி வருகிறபடியாலே, புருஷர்களுக்குள்ளவாறு ஸ்திரீகளுக்கும், அவர்களால் ஆகக்கூடிய காரியங்களில் இராஜாங்க முறையில் சுதந்திரம் இருக்கவேண்டுமென்பதையும், இராஜீய விஷயங்களில் அவர்களின் அபிப்பிராயங்களும் இன்றியமையாதன வென்பதையும் நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

## 11. அந்தரங்க இராஜாங்க முறை.

சிநேகிதர்களே, கவனியுங்கள்! வெகு முக்கியமானதும், உயர்நலமுள்ளதுமான ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசப்போகிறேன். அதைப்பேசி முடிப்பதே என்னுடைய இவ்வுபந்நியாசத்தின் முடிவுமாகும். இராமாயணத்திலும், மகா பாரதத்திலும், பூதேவியானவள் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியிடஞ் சென்று பூபாரம் தீர்க்கவரும்படி அவரை வேண்டிக்கொண்டாளென்று சொல்லப்பெற்றுள்ளது. அவ்விஷயத்தை நாமும் படித்திருக்கிறோம். அந்த விஷயத்தை அங்கு விரிவாய்ச் சொல்லப்பெற்றுள்ளபடி நாம் படித்ததோடு நிற்காமல், அதன்கண் புதைந்துகிடக்கும் ஆழ்ந்த கருத்தைக் கவனித்

தோமா? கவனித்திருந்தால் நமது வாழ்க்கை வெகுவாக சீர்திருத்தம் பெற்று மாறி இருக்கவேண்டும். அந்தக்கதையினால் பின்வருமாறு ஒரு முக்கியமான, உயர் நலமமைந்த உண்மை வெளியாகின்றது.

இந்த பூமியானது நாம் நினைக்கிறபடி யாதோ உயிரற்ற ஒரு இயற்கைச்சட்டத்தையொட்டியுண்டாகி, இப்பொழுதிருக்கும் ரூபத்தில் இருக்கிறதென்றும், ஏதோ ஒரு காலத்தில் அழிந்து ஒன்றுமில்லாமற் போமென்றும் சொல்ல இடமில்லை. அது குறித்த ஒரு உத்தேசம் பற்றி ஒருகாலத்தில் உண்டாக்கப்பெற்றதென்றும், தான் நான் என்ற பிரக்ஞையுடன் உயிருள்ள ஜீவனுகவே அது இருக்கிறதென்றும், இந்த தூலரூபம் ஒன்றுமட்டுமேயன்றி, சூக்ஷ்ம காரணப் பிரகிருதியாலாய ரூபங்களும் பூமி என்ற சீவனுக்கிருக்கின்றனவென்றும், உத்திரவாதமுங் கடமையுமுடைய ஒரு உத்தியோக நிலையை ஈசுவரனுடைய ஆளுகையின் கீழ் பெற்றிருக்கிறதென்றும், அதனால் எந்த ஒரு காலத்தில் தனது உத்தியோகத்தைச் சரியாகக்கொண்டு செலுத்தத் தனக்குச் சாத்தியமாகாதிதமாய் அதர்மம் அதிகரிக்கிறதோ, அப்பொழுது தனது நாயகனிடம் முறையிடுகிறதென்றும், எந்த உத்தேசத்துடன் சிருஷ்டிக்கப் பெற்றதோ அவ்வுத்தேசம் நிறைவேறின பின், காலக்கிரமத்தில் பூமியானது இவ்வுருமாறி வேறுருவாகிறது, அதாவது பிரலயமாகித் தூலரூபங்குலைவுறும் நிலையை யடைகிறதென்றும், தீர்மானமாகச் சொல்ல வேண்டியதற்குள்ள ஆதாரங்கள் இருக்கின்றன. பூமியில் நிகழும் எந்தக் காரியமும் அகாரணமாய் நிகழ்கின்றதில்லை. காரணத்

தைப்பற்றியே நிகழ்கிறது. உலகில் அந்தரங்கமான இராஜாங்கம் எக்காலும் அழிவென்பதில்லாமலிருந்து கொண்டிருக்கிறது. அந்த அந்தரங்கமான இராஜாங்க முறைக்கு பூமியின் விவகாரங்களுஞ் சம்பந்தமா யிருக்கின்றன. இந்த பூலோகத்திற்குத் தலைவரான ஒருவர் இந்த பூகோளத்திற்கே அந்தரங்கமான இராஜாங்கத்திற்கு இராஜாவா யிருக்கின்றனர். அவர் சாம்பலக் கிராமத்தில் இன்னும் இருக்கின்றார். அவருடைய சித்தமே பூலோக சரித்திரத்தில் சட்டமாக நடைபெறுகிறது. அவருடைய நிலைக்கு அடுத்த கீழ்ப்படியில் புத்தர் என்பவர் இருந்து உதவுகிறார். அந்தரங்க இராஜ்ய முறையில் அநேக இலாகாக்களுண்டு. மானிட வர்க்கங்களை புண்டுபண்ணி நடத்துவது ஒன்று. இதற்குத் தலைவர் மநு. ஞானத்தை யுபதேசிக்கின்ற இலாகா வேறொன்று; அதற்குத் தலைவர் ஜகத்குரு. இருவரும் அடுத்த கீழ்ப்படியிலிருந்து உலகின் காரியங்களை நடத்துகிறார்கள். அவர்களின் கீழ் ஜீவன் முக்தர் பலர் பலதேசங்களுக்குத் தலைவர்களாகி, பல இலாகா காரியங்களை நடத்தி வருகிறார்கள். அகஸ்தியமா முனிவர் இந்தியாவின் ரக்ஷகரான மகருஷி. மநு என்ற மகருஷி அடுத்த கீழ்ப்படியிலிருக்கிறார். உலகில் ஜனங்களிடையில் சம்பந்தித்துக்கொண்டு அநேக ஞானசீடர்கள் அடுத்த கீழ்ப்படியிலின்று கைங்கரியஞ்செய்து வருகிறார்கள். இந்த அந்தரங்க இராஜாங்க அமைப்பில் தவறின்றியாவும் சரியாக நடைபெறுகின்றன. அந்த இராஜாங்கமுறைக் கதிபதிகளாயுள்ள மகாத்மாக்கள் ஒரு உயர்நல நாகரிகத்தையுலகிற் சமீபத்தில் நிலைநாட்ட முயன்றிருக்கின்றனர்.

அந்த நாகரீகத்தின் இலக்ஷணமாவது, அன்பு, ஸகோதரத்வம், ஒப்புரவு, நிஷ்காமம் என்பனவாம். அதற்குத்தக்க உலகநிலை தயாராகவேண்டி யிருக்கிறது. அதற்குத்தக்க சிலர்களைத் தயாரிக்க வேண்டியதாயிருக்கிறது. அநேக சிலர்கள் அந்நாகரிகத்திற்கானவர்களாக இப்பொழுதே அமெரிகா, ஆஸ்த்ரேலியா முதலிய நாடுகளில் பிறந்து வருகின்றனர், என்பது ஞானிகளின் துணிபு. அதை அநுசரித்து மேனாட்டு சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரிகளும் அவ்வித மநிதவகுப்பு ஒன்று உண்டாகி வருகிறதென்று சொல்கிறார்கள். அந்த நாகரீகத்தை யமைப்பதற்கே அநேக முயற்சிகளை அந்தரங்க இராஜாங்கத்தினர் செய்து வருவதில் ஆங்கிலேயரையும் இந்தியரையும் ஸகோதரர்களாய் நேசித்து உலக நாகரீகத்தை நாட்டும்படி செய்தல் ஒன்று. அந்த உயர்நல நாகரீகம், அதாவது புதிதாய் உண்டாகிக்கொண்டு வருகிற நாகரீகம் தழைக்கும் வண்ணமே ஜகத்குருவும் அவதரிக்கிறார். அதற்காக உலகை நாம் பலவழிகளிலும் தயார் செய்ய வேண்டிய கடமை நமக்கு ஏற்பட்டுள்ளது. முக்கியமாக இதில் கண்ட நான்கு துறைகளில், நம்மில் யாருக்கு எது சாத்தியமோ அதில் இறங்கி பாடுபட்டு வரவேண்டும். அதனால் உலகைத் தயாரிக்கவேண்டும். உலகைச் சரியாக தயாரிக்க வேண்டியதற்கு நமக்கு சக்தியைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டியே இம்முடிவுரையின் துவக்கத்தில் நம்மைநாம் தயாரித்துக் கொள்ளவேண்டிய வழிகளைப் பற்றிக் கூறினேன். அவ்வாறு நம்மை நாம் தயாரித்துக்கொண்டு உலகைத்

தயாராகச் செய்தலால், மகாந்மாக்கள் அவதரிக்கின்ற இந்நாளில் மற்ற எந்நாளிலு மென்றதைவிடச் சுலபமாய் நாம் ஞானதீக்ஷைக்குத் தயாராகலாம். இந்நன்னாளை ஆலசியமாய் விட்டுவிட்டாலோ, மறுபடியும் இத்தகைய நன்னாள் கிட்டுஞ் சனனம் வாய்ப்பது துர்லபம். ஆகையால், சகோதரர்காள், எழுமின், விழிமின், ஸத்குருக்களை நாடுமின், தொண்டு புரிமின்!

तस्मात् उत्तिष्ठत जाग्रत प्राप्यवरान्निबोधत ॥

ॐ ! शांतिः ॥

## குறிப்பான சில முக்கியஸ்தர்களின் அபிப்பிராயங்கள்.

**M. R. Ry. Dewan Bahadur, Sir. T. Sadasiva Iyer Avl. Kt. M. L., Retired High-Court Judge, Madras**, writes under date 17-8-25 to the author, as follows :

My dear brother,

" I send you a short preface (to " Path to union with God "). Please Omit in page 21 the sentence in the 7th line *'அவீசி என்ற அதற்குப் பேர்'* I do not think that 'Avichi' means the lower Moksha."

Yours fraternally,

T. SADASIVA IYER

(Krishna Dasa.)

**M. R. Ry. Raja Dharma Praveena Dewan Bahadur K. S. Chandrasekara Aiyar Avl B.A., B.L., Retired Chief Judge of Mysore** writes under date 17-8-25 to the author, as follows :

To

M. R. RY. T. A. GOPALASWAMI NAIDU

Dear Sir and Brother,

" In this excellent little book are contained the essential truths bearing on the **Path to union with God**. These truths are stated, moreover, in a clear

and succinct form, in easy and chaste tamil, and are supported and illustrated by apt quotations from scriptual and other authorities. **It is on the whole a praiseworthy attempt to popularise Theosophic knowledge among the Tamil-Knowing population** and as such has a wide scope of usefulness."

Yours fraternally

K. S. CHANDRASEKARA AIYAR,

Retired Chief Judge of Mysore.

**M. R. Ry. A. Ranganatha Mudaliar Avl, B.A.,B.L., Retired Deputy Collector, and member for Bellary in the Madras Legislative Council**, writes under date 11-9-25 to the author, thus :

Dear brother,

"..........................................................................

Congratulations on turning out a useful book."

Yours sincerely,

A. RANGANATHAM.

சீகாழி தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமான் ப. அ. முத்து தாண்டவராயபிள்ளை

அவர்கள் எழுதியது.

---

“ ஆரியத்துந் தமிழகத்து மனைத்துயிரு
 மின்பநிலை யணைவான் கூறும்
பாரியநற் பொருள் தொகுத்துப் பிரமஞா
 ணந்திகழப் பரிவினேதக்
காரியலிற் கற்றார்க்கு மற்றார்க்கும்
 பயன்படுமாக் கருணை கொண்டு
சீரியலு முத்திநெறி யெனுநூலைச்
 செய்தளித்த சீமான் கேண்மின்.

“ பொன்னாரும் புனற்பொன்னிவளஞ்சுரப்பப்
 பைந்துடவை பொலிவி னோங்கி,
மின்னாரும் பசும்பூணர் கெழுமும் வட்
 டாரமெனும் விளைநகர்க்கண்
தென்னாருங் கல்வியறி வொழுக்கத்துச்
 சிறந்து நனி திகழு மாண்பார்,
மன்னாரு நற்குலத்துக் கோபால
 சாமியெனு மகிபர் மாதோ.”

## பத்திரிகைகளின் அபிப்பிராயங்கள்.

### மோட்ச மார்க்கம்.

"இந்நூலாசிரியர், சமரஸத்தைப் பற்றியும், இல்லற வாழ்க்கையைப்பற்றியும், மோட்சமார்க்கத்திற்குரிய படிகளைப்பற்றியும்.......... எழுதியிருக்கிறார். முக்கியமாக சமரஸத்தைப்பற்றிக் கூறியுள்ள பாகமும் இல்லற வாழ்க்கையைப்பற்றிக் கூறியுள்ள பாகமும் எமது உள்ளத்தைக் கவர்ந்தன. பிரம்ம ஞான சபையைச் சேர்ந்தவர்கள் மாத்திரம் இந்நூலைப் படிக்க வேண்டுமென்பதில்லை. அச்சங்கத்தைச் சேராத எல்லாரும் இதைப்படித்துப் பயனடைய வேண்டுமென்று விரும்புகிறோம்.

குழந்தைகளைப் பழக்கும் முறையில் ஜாக்கிரதை பெற்றிருக்கவேண்டிய சுருக்க விஷயங்கள்.

### தசாவதாரங்களின் உண்மை.

இவ்விரண்டு துண்டு பத்திரிகைகளும் மேற்படி நூலாசிரியராலேயே எழுதப்பட்டன. முன்னது ஒரு மொழி பெயர்ப்பு நூல். அதில் குழந்தைகளையுடைய தாய்மார்கள் கவனிக்க வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன. பின்னைய நூலில் தசாவதாரங்களின் உண்மை விரித்துக் கூறப்பட்டிருக்கிறது. ஜீவாத்மா, ஜங்கமவர்க்கத்திலும் மனிதவர்க்கத்திலும் பல படிகளேறி விகாசம்பெற்று வருவதையே இந்த அவதாரங்கள் குறிப்பிடுகின்றன என்பதை இச்சிறிய பிரசுரம் அழகாக எடுத்துக் காட்டுகிறது.

சென்னை }
21—8—1925. } ("நவசக்தி.")

**Path to union with God (in tamil) by T. A. Gopalaswami Naidu, F. R. S. Vattaram,............** is a neat presentation of Theosophical truths in tamil. It deals with the **Masters and the Path**, its difficulties and stages, the coming of the World Teacher and the work of self preparation.

**The Ten Avatars (in Tamil) by T. A Gopala swami Naidu**...............deals with the Avatars of Mahavishnu, Mr. Gopalaswami Naidu explains the significance of each Avatar, and includes Buddha in the list, while he excludes BalaRama.

**Hints on the care and training of children by T. A. Gopalaswami Naidu**..... ...................... is a translation (into tamil) of one of the publications of the **Parents and Teachers League**.................. Contains much valuable information, and its translation is particularly valuable.

Madras
9—9—1925. } (*"New India"*)

---

மோக்ஷ மார்க்கம்:—இது தஞ்சை ஜில்லா சீர்காழியைச் சார்ந்த வட்டாரம் கிராமத்திய மிராசுதார் திருவாளர் T. A. கோபாலசாமி நாயுடு அவர்கள் திவ்ய ஞானசபை (Theosophical Society)யில் வெளிவந்த அரும்பெரும் பொருள்களைத் திரட்டிச் சுலபமாக எல்லோரும் அறியும்படி எளிய தமிழ் நடையில் செய்துள்ள ஒரு பாட புத்தகம் (Text Book) போல் விளங்குகிறது. இதிலுள்ள விஷயங்களுக்கெல்லாம், நமது நாட்டில் வழங்கும் சமஸ்கிருத சுலோகங்களும், தாயுமானவர், ஔவை முதலிய பெரியோர்கள் பாக்களும், திரு

வாசகம், திருவாய்மொழி, திருவருட்பா முதலிய தமிழ் வேதங்களின் செய்யுட்களும் மேற்கோளாக நிறைந் துள்ளன. தாரகசபையின் முக்கிய அம்சங்களும், குரு நாதன் வருகையைப்பற்றிய விஷயங்களும் ஒரு பாகத் தில் அலாதியாகக் கூறப்பட்டுள்ளன. சாமானிய தமிழ் அறிவுள்ள பெண்மக்களும் சுலபமாய்ப் படித்து, மத வெறியிலிருந்து நீங்கி, மதி அடைந்து, எல்லாரும் சம ரசசன்மார்க்கத்தை அடைய இஃதொரு நற்சாதகமாகும். நல்ல காகிதத்தில் நன்றாய் அச்சிடப்பட்டிருக்கிறது. விலை அணு பத்து.

தசாவதாரங்களின் உண்மை:—இஃது ஒரு சிறிய துண்டு புத்தகம்; மேற்கூறிய நாயுடு அவர்கள் இயற் றியதே. நமது புராணங்களில் அரிய உலக சரித்திரக் குறிப்புகள் புதைந்து கிடக்கின்றன. மனித விகாச முறையின் உண்மையைத் தச அவதாரங்களினின்றும் அறியலாம். இவ்வுண்மையும், பிறவும் இதில் விளங் கும். விலை அணு 1.

குழந்தைகளைப் பழக்கும் முறை:—53 பக்கம் உள்ள இச்சிறு புத்தகமும் நமது நாயுடு இயற்றியதே. பெற்றோரும் உபாத்தியாயரும் சேர்ந்த சங்கம் ஒன்று குழந்தைகளின் நன்மைக்கு ஏற்பட்டுள்ளது. நமது நாட்டில் குழந்தைகளையும் பெண்மக்களையும் கொடுமை யாகவும் கீழாகவும் நடத்திவருகிறோம். இதனால் எவ் வளவோ கெடுதல் குடும்பத்துக்கும், தேசத்துக்கும் விளைந்து வருகிறது. குழந்தைகளை நம்மைப்போல் அவர்களும் ஜீவன் என்று உணர்ந்து எவ்விதம் போற்றி வளர்ப்பது என விளக்குவது பெற்றோருக்கும் உபா த்தியாயருக்கும் அவசியமானது.

Rao Sahib சு. வி. கனகசபை பிள்ளை,

சென்னை  
1925ஆ செப்டம்பர்மீ

பத்திராசிரியர்  
"புதுயுகம்"

P. W. D. Asst. இன்ஜினீர்.

சீகாழி தாலுகா வட்டாரம் ஸ்ரீமான் T. A. கோபாலஸாமி நாயுடு அவர்களால் இயற்றப்பெற்ற "மோக்ஷமார்க்கம்" எனும் புத்தகம் வரப்பெற்றோம். அரிய விஷயங்கள் நல்ல தமிழில் சுருக்கமாயுந் தெளிவாயும், வித்தியார்த்திகளுக்கு நேரக்கூடிய சில சந்தேகங்களை நிவர்த்தித்து உண்மை அபிப்பிராயம் இன்னதெனக் காட்டக்கூடியதாயும் எழுதப்பட்டிருக்கிறது. எம்மதச் சார்புமின்றி ஸர்வமத சம்மதமான மூல உண்மைகளைப்பற்றிச் சொல்வதால், சகலரும் விருப்பத்துடன் இந்நூலை வாங்கி வாசித்துப் பயனடைவார்களென்று நம்புகிறோம்.

1925ளு அக்டோபர்மீ } "பத்திராதிபர் ஞானோதயம்."

---

## மோக்ஷ மார்க்கம்.

சீர்காழித் தாலூகா வட்டாரம் மிராசுதார் திருவாளர் T. A. கோபாலஸ்வாமி நாயுடு அவர்கள் பிரம ஞான சபைக்கூட்டங்களில் அவ்வப்போது பேசிய விஷயங்களைத் திருத்தியும் புதுக்கியும் பெருக்கியும் மோக்ஷமார்க்கம் என்ற நூலாக வெளியிட்டிருக்கிறார். இதில் மோக்ஷமார்க்கத்தை நாடும் ஒவ்வொருவரும் அறிந்துகொள்ள வேண்டிய பல நல் விஷயங்கள் காணப்படுகின்றன. வடமொழி நூல்களிலிருந்தும் தென்மொழி நூல்களிலிருந்தும் பல மேற்கோள்கள் இதில் வெளியாயிருக்கின்றன; எல்லோரும் படித்துப் பயனடையத் தக்க எளிய நடையில் இதில் அமைந்திருக்கிறது.

## குழந்தைகளைப் பழக்கும் முறை.

இதன் ஆசிரியரும் ஸ்ரீமான் நாயுடுவே யாவர். தற்காலத்தில் குழந்தைகளைப் பழக்கும் முறைகளைப் பெற்றோர்கள் நன்றாயறிந்து கொள்ளாமல் தங்கள் மனம் போன போக்கெல்லாம் நடத்துவதாலேயே பிள்ளைகள்

சீரழிந்து போகின்றனர். குழந்தைகளை நடத்தவேண்டிய முறைகளை ஸ்ரீமான் நாயுடுகாரு இதில் சுருக்கமாக விளக்கி யிருக்கிறார். தமிழ் நாட்டுப் பெற்றோர்கள் இதனைப் படிப்பதால் பெரிதும் பயனடையலாம்.

## தசாவதாரங்களின் உண்மை.

காவற்கடவுளான திருமாலின் பத்தவதாரங்களி னுண்மையை விளக்கும் இது சிறிய நூலாயினும் அரிய நூலாகும். இதிலுள்ள உண்மைகளைத் தமிழர்களானோர் ஒவ்வொருவரும் அறிந்து கொள்வது இன்றியமையாதன. இதனை இயற்றியவரும் ஸ்ரீமான் நாயுடுவேயாவர்.

சென்னை
8—10—1925.

பத்திராதிபர்,
(லோகோபகாரி.)

# NOTICE.

## அறிவிப்பு.

தஞ்சாவூர் ஜில்லா சீகாழி தாலுக்கா வட்டாரம்
மிராசுதார் டி. எ. கோபாலசாமி நாயுடுகாரு
இயற்றிய மூலநூல்களும் மொழி
பெயர்ப்பு நூல்களும்.

---

| | | R. | A. | P. |
|---|---|---|---|---|
| (1) | தசாவதாரங்களின் உண்மை<br>The Ten Avatars (in Tamil) விலை | 0 | 1 | 0 |
| (2) | குழந்தைகளைப் பழக்கும் முறையில் ஜாக்கிரதை பெற்றிருக்க வேண்டிய சுருக்க விஷயங்கள்.<br>Hints on the care and the training of children (in Tamil) விலை | 0 | 3 | 0 |
| (3) | கொடுஞ் செயலற்ற சீர்திருத்தம்<br>Discipline without brutality (in Tamil) (out of print) விலை | 0 | 3 | 0 |
| (4) | மோக்ஷ மார்க்கம்<br>Path to union with God (in Tamil) விலை | 0 | 10 | 0 |

**அடியிற்கண்ட இடங்களில் விற்பனைக்குத் தயாராயிருக்கின்றன.**

(1) "The Theosophical Publishing House"
Adyar, Madras. S.

(2) Ripon Book Depot,
87, Thambu Chetty Street, Madras.

(3) S. P. C. K. Book Depot,
Vepery, MADRAS.

(4) The Author.

மற்றும் வேறு புத்தகசாலைகளிலும் விசாரிக்க.